# கொலம்பியா

புதிய வெளியீடு



கானகலாதர

## மதுரை மணி அய்யர்

**GE.6432 - ஷண்முகப்ரியா**

இராகம் • • • தானம்

பல்லவி • 2 பாகங்கள்

சமீபத்திய முந்திய வெளியீடு

GE.6347 { நாததனுமனிசம்
தெலிஸிராம



G.H.RAO

## ஸரஸ்வதி ஸ்டோர்ஸ் • மதறாஸ் • 2

(மேற்கண்ட ரிகார்டுகள் எங்களிடமும் கிடைக்கும்

**மெஸர்ஸ். குப்தா கார்ப்பொரேஷன்**

தபால் பெட்டி நெ. 35, 17-A/428, அருணாசல ஆச்சாரி தெரு, சேலம்

1—11.1

1

தேனி நாடார் சரஸ்வதி உயர்தர கலாசாலை அபிவிருத்தி நிதிக்காக



## ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி
### உத்தமும் சங்கீதக் கச்சேரி

★

ஆஸ்தான வித்வான்
மைசூர் டி. சௌடய்யா ... பிடில்
கல்பாத்தி ராமனுதன் ... மிருதங்கம்
ஆலங்குடி ராமச்சந்திரன் ... கடம்

**20-2-48 வெள்ளி மாலை 5-30 மணிக்கு**

**தேனி, நாடார்**
**சரஸ்வதி ஹைஸ்கூல் காம்பவுண்டில்**

ரஸிகமணி ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்கள்
தலைமை வகிப்பார்கள்

டிக்கெட்டுகள் : ரூ. 250/: 100/: 50/: 25/: 10/:

நாடார் சரஸ்வதி உயர்தரக் கலாசாலைக் கமிட்டி, தேனி

ஒலி பெருக்கி : திருச்சி ரேடியோ ஸேல்ஸ் & ஸர்விஸ்.

குறிப்பு :—ஏற்கனவே 30-1-48 அன்று ஏற்பாடு செய்யப்பட்டிருந்த கச்சேரி 20-2-48 தேதிக்கு ஒத்தி வைக்கப்பட்டது.

---



**வீட்டில் ஒரு ஹிண்ட் இருப்பது சமயலாபம்**

கடைகளுக்கும் மார்க்கெட்டுக்கும் அதி விரைவில் போய் வர வீட்டில் ஒரு ஹிண்ட் ஸைகிள் வைத்துக் கொள்ளுங்கள்.




தயாரிப்போர்கள் : ஹிண்ட் ஸைகிள்ஸ் லிட்.,
சென்னை இராஜதானிக்கு (சுதேச ஸமஸ்தானங்கள் உள்பட)
ஸோல் ஏஜண்டுகள்: டிலக்ஸ் ட்ரேடிங் கோ., பாலக்கரை, திருச்சி
HC. 26—Tam பிராஞ்சு : 11, ப்ராட்வே, சென்னை.

13, ஸில்வர் ஜூபிலி பார்க் ரோடு, பெங்களூர்

## கோவை

## காங்கிரஸ் மாளிகை நிதிக்காக

உதவி ஸங்கீதக் கச்சேரி

★

ஸ்ரீமதி
எம். எஸ். சுப்புலக்ஷ்மி ... பாட்டு
சங்கீதரத்ன சௌடய்யா ... பிடில்
கல்பாத்தி ராமநாதன் ... மிருதங்கம்

★

கோயமுத்தூர், ஆர். எஸ். புரம் ஹைஸ்கூலில் அமைக்கப் பட்டுள்ள தமிழ் மாகாண அரசியல் மகாநாட்டுப் பந்தலில்

**17-1-1948 சனிக்கிழமை மாலை 5 மணிக்கு**

---

## பொங்கலோ பொங்கல்!

நன்னாளுக்குகந்த ஆனந்த விருந்து!!

# ஹாஸ்யச் சுரங்கம்

'பரதன்' (ரா. பார்த்தசாரதி)

சிருஷ்டித்த வாழ்க்கை விசித்திரங்கள் அடங்கிய தொகுப்பு

**ராஜாஜி அவர்கள்**

அளித்த அரிய முன்னுரையுடன்

**விலை ரூ. 2-8-0**

★

கிடைக்குமிடம்:

## தமிழ்ப்பண்ணை

தியாகராய நகர் :: மதராஸ்-17

# கல்கி

## பொருளடக்கம்

மலர் 7 இதழ் 24 | ஜனவரி 11 | சர்வஜித்து ௵ மார்கழி 27



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனை.



பர்மாவின் பூர்வீக மன்னர்களுக்குச் சொந்தமான இந்தத் தங்கச் சிங்காதனத்தைப் பர்மா பூரண சுதந்திரம் அடைந்த அன்று சுதந்திர இந்திய சர்க்கார் திருப்பிக் கொடுத்தார்கள்.



சுதந்திர இந்தியாவின் பிரதம மந்திரி பண்டித ஜவாஹர்லால் நேருவும் சுதந்திர பர்மாவின் பிரதம மந்திரி தாகின் நூவும் அளவளாவுகிறார்கள்.



மலர் 7 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிட்டடி பாப்பா —பாரதி | இதழ் 24

# என்ன சேதி?

## பொங்கல் பொன் மலர்

பல விசேஷ மலர்கள் இதுவரையில் வெளியிட்டிருக்கிறோம். ஆயினும் இந்த வருஷத்துப் பொங்கல் புது மலரைப் போல் நமக்குப் பூரண திருப்தியும் மகிழ்ச்சியும் அளித்த மலர் வேறு எதுவும் கிடையாது. இத்தனை நாளும் வெளியான 'கல்கி' விசேஷ மலர்களுக்கெல்லாம் மணிமகுடமாக இவ்வாண்டு 'கல்கி' பொங்கல் மலர் விளங்குகிறது. சுதந்திர பாரத தேவியின் சிரசில் அணியக் கூடிய மலராகவும், தமிழ்த் தாய் பார்த்து மகிழ்ந்து பெருமைப்படக் கூடிய மலராகவும் திகழ்கின்றது. பொங்கலுக்கு முதல் நாளைக்குள் ஏஜெண்டுகளிடமோ 'கல்கி' காரியாலயத்திலோ ரூ. 3-8-0 செலுத்திப் பிரதியை உறுதிப் படுத்திக்கொள்ளக் கோருகிறோம்.

## சரியான பாடம்

மூக்கு உடைந்தது! உடையாமல் என்ன செய்யும்? சர்வ வல்லமை பொருந்திய பிரிட்டிஷ் சர்க்காரைப் பணிய வைத்துப் பாரத நாடு சுதந்திரம் பெறும்படி செய்த தியாக சீலர்களும் தீரர்களுமான தலைவர்களுக்கு முட்டுக் கட்டை போடுவோரின் மூக்கு உடையாமல் என்ன செய்யும்?

சுதந்திரம் பெற்ற அடியோடு பல்வேறு பயங்கரமான பிரச்னைகள் முளைத்திருக்கின்றன. அவற்றைச் சமாளிப்பதில் நமது அரும் பெரும் தலைவர்கள் ஈடுபட்டிருக்கிறார்கள். இந்த நெருக்கடியான சமயத்தில் அவர்களுடன் சகல விதத்திலும் ஒத்துழைக்க வேண்டியது தேச மக்களின் இன்றியமையாத கடமையாகும். அப்படியிருக்க, தலைவர்களுடன் ஒத்துழைக்க மறுத்து இடையூறு செய்வோரை என்னவென்று வர்ணிப்பது?

உணவுக்கும் உடைக்கும் பெரும்பாலோரும் கஷ்டப்பட்டு வரும் இந்தக் காலத்தில், தொழிலாளர்களுக்கும் கஷ்டம்தான் என்பதை யாரும் மறுக்க முடியாது. அவர்களுடைய கஷ்டங்களை நமது தலைவர்களைக் காட்டிலும் நன்கறிந்தவர்கள் வேறெவருமில்லை. சுதந்திரம் பெற்றும் சீர்குலைந்து கிடக்கும் தேசம் சீராகும் வரையில் அவகாசம் கொடுங்கள்; அது வரையில் வேலை நிறுத்தம் என்ற பேச்சையே எடுக்காதீர்கள் என்று மகாத்மா காந்தி முதல் பல தலைவர்களும் தினசரி கதறி வருகிறார்கள். அப்படியிருந்தும் அடிக்கடி வேலை நிறுத்தங்கள் நடப்பதன் விளைவாகத் தொழிலாளர்களுக்கோ தேசத்துக்கோ நன்மை ஏற்பட முடியுமா?

சென்ற திங்கட்கிழமை கல்கத்தாவிலும் பொது வேலை நிறுத்தம் செய்வதென்று சிலர் திட்டம் போட்டிருந்தார்கள். அரசியல் செல்வாக்கை முன்னிட்டுத்தான். அங்கு சென்றிருந்த சர்தார் பட்டேல் வேலை நிறுத்தத்தால் ஏற்படக் கூடிய விபரீதங்களை பொதுக் கூட்ட மொன்றில் எடுத்துக் கூறினார். 'ஆபரேஷன் வெற்றிகரமாக நடந்தது; ஆனால் நோயாளி பிழைக்கவில்லை' என்பதுபோல, கல்கத்தாவில் வேலை நிறுத்தம் நடக்கத்தான் செய்தது. ஆனால், அதில் எவரும் கலந்து கொள்ளாததால், படுதோல்வி யடைந்தது!

கல்கத்தா சம்பவம் இதர மாகாணங்களிலும் வேலை நிறுத்தத்தைத் தூண்டுவதில் சிரத்தை கொண்டிருக்கும் கோஷ்டியினருக்குச் சரியான பாடமாயிருக்குமென்று எதிர்பார்க்கிறோம்.

## சர்தாரின் நன்றி

கல்கத்தா வேலை நிறுத்தம் தோல்வியடைந்த பிறகு சர்தார் வல்லபாய் பட்டேல் கல்கத்தா வாசிகளுக்கு விடுத்த நன்றி கூறும் அறிக்கையில் பின்வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்:

"சென்ற திங்கட்கிழமை வேலை நிறுத்தத்தில் கலந்து கொள்ளாததன் மூலம், கல்கத்தா ஜனங்கள் என் மீதுள்ள அன்பையும் அபிமானத்தையும் நிதர்சனமாகக் காட்டியிருக்கிறார்கள்.

"நமது தலைசிறந்த தலைவர்களில் ஒருவரான ராஜாஜியை நாங்கள் மேற்கு வங்காளத்தில் கவர்னர் பதவி வகிப்பதற்காகக் கொடுத்திருக்கிறோம். அவரது ஆற்றலும் நிர்வாக அநுபவமும், அரசியல் மேதையும் பல்வேறு துறைகளில் பலமுறை நிரூபிக்கப் பட்டிருக்கின்றன. உங்கள் மாகாண மந்திரி சபையில் யோக்கியப் பொறுப்பும், அந்தரங்க சுத்தியும், உற்சாகமும், கடமையில் கண்ணும் கருத்துமுள்ள பொது ஜன ஊழியர்கள் இருக்கின்றனர். நீங்கள் அவர்களுக்கு ஆதரவளித்து வரும் பட்சத்தில், வங்காளப் பிரிவினையால் ஏற்பட்டுள்ள பல்வேறு கஷ்டமான பிரச்னைகளைத் தீர்ப்பதில் நிச்சயமாக வெற்றி பெறலாம்."

ராஜாஜியைக் கவர்னராகப் பெற்றது மேற்கு வங்காளத்தின் அதிர்ஷ்டம் என்பதை வங்காளிகள் இப்போது நன்கு உணர்ந்திருக்கிறார்கள். சர்தார் பட்டேல் அதை மேலும் உறுதிப்படுத்தியிருக்கிறார். தமிழ் மக்கள் பெருமையடையக் கூடிய விஷயந்தான்.

## சிகப்புக் கொடி!

இந்திய சர்க்காருக்கும் ஹைதராபாத் நைஜாமுக்கும் சமரசம் ஏற்பட்டு, இந்திய சர்க்காரின் ஏஜெண்டு ஜெனரலான ஸ்ரீ முன்ஷி ஹைதராபாத்துக்கு வருமுன்னரேயே நைஜாம் மன்னர் சீறி விழ ஆரம்பித்திருக்கிறார். விஷயம் அப்படியொன்றும் பெரிதல்ல, வேறு தகுந்த இடம் கிடைக்கும் வரையில், அதாவது ஜனவரி மாதம் பதினைந்தாம் தேதி வரையில் பதினொரு நாட்களுக்கு பழைய ரெஸிடென்ஸி கட்டிடத்தில் ஸ்ரீ முன்ஷி தங்கியிருக்கக்கூடாது என்று நைஜாம் பெரும் வாதம் நடத்தினார். எவ்வளவு பெரிய பிரச்னை பாருங்கள்!

இறுதியில் மேற்படி விபரீதத்தை லார்டு மவுண்ட்பாட்டன் எடுத்துக்காட்டிக் கண்டித்த பின்தான் நைஜாம் அடங்கினார். இதன் மத்தியில், 'இந்தியாவிலிருந்து ஹைதராபாத்தை நோக்கிக் காற்று அடிப்பதற்கும் நாங்கள் இடம் கொடுக்கமாட்டோம்' என்று ஹைதராபாத் மஜ்லிஸ் தலைவரான ஜனாப் காஸிம் ராஸ்வி கர்ஜனை செய்கிறார். இதைக் குறித்து நாம் எதுவும் சொல்லுவதற்கில்லை. ஏனெனில், அது ராஸ்வியும் வாயுபகவானும் முடிவு செய்து கொள்ள வேண்டிய விஷயம்! ஆனால், கிருஷ்ணா ஜில்லாவில் நைஜாம் போலீஸார் பிரவேசித்து நாலு பேரைச் சுட்டுக் கொன்றார்கள் என்று மேற்படி ஜில்லா கலெக்டர் அறிக்கை அனுப்பியிருப்பதை நாம் அலட்சியம் செய்வதற்கில்லை.

இதெல்லாம் ஒரு விஷயத்தைத் தெளிவாக்குகிறது. இந்தியா—நைஜாம் சமரச உடன்படிக்கை ஏற்பட்ட போதிலும் நைஜாமுக்கு உண்மையில் சமரச மனப்பான்மை ஏற்படவில்லை. நைஜாமிலிருந்து இந்தியாவின் சுதந்திரத்துக்கு ஒரு பெரிய அபாயம் மூண்டு எழுந்து பெரிதாக வளரக்கூடும். அதற்கு இந்தியா தயாராக வேண்டும்; முக்கியமாகச் சென்னை மாகாணம் தயாராக வேண்டும்

கௌரவமான
சமரச சமாதான
வாழ்க்கை

நாம் ஒன்று சேர்ந்து ஒரே லட்சியத்தை நோக்கிச் செல்லுவோம்.

சுதந்திர பர்மா

சுதந்திர இந்தியா



# புது வாழ்வு பெற்றது!

வெகு காலமாய் நின்றுபோய்க் கிடந்த ஆசியாவின் அதிர்ஷ்டச் சக்கரம் சமீபகாலமாகச் சுழல ஆரம்பித்திருக்கிறது!

கொஞ்சம் வேகமாகவும் சுழல ஆரம்பித்திருக்கிறது!

இல்லாவிட்டால் ஆறு மாதங்களுக்குள் மூன்று நாடுகள் சுதந்திரம் பெற முடியுமா?

முன்னர் இந்தியா சுதந்திரத்தை இழந்ததால், இலங்கையும் சுதந்திரத்தை இழந்து கிடந்தது. பர்மாவின் சுதந்திரமும் பறிபோயிற்று.

இப்போது இந்தியா அன்னிய ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெற்றுவிட்டதால், அதை யடுத்து இலங்கையும் பர்மாவும் விடுதலை பெற்றுவிட்டன.

பாரத நாடு சுதந்திரத்தை இழந்த பின், பர்மாவோ அல்லது இலங்கையோ தன் சுதந்திரத்தைப் பாதுகாத்துக்கொள்ள முடியவில்லை.

இந்தியா சுதந்திரம் பெற்ற பின், பர்மாவிலோ அல்லது இலங்கையிலோ தன்னுடைய ஆதிக்கத்தை நிலைநிறுத்த பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தினால் முடியவில்லை.

இதிலிருந்து சந்தேகத்துக்கு இடமின்றி ஒரு விஷயம் புலனாகிறது.

அதாவது பர்மா, இலங்கை போன்ற பல ஆசிய நாடுகளின் வாழ்வு இந்தியாவின் வாழ்வையே பொறுத்திருக்கிறது என்பதுதான்.

இந்தியா தாழ்ந்தால் மற்ற ஆசிய நாடுகளுக்கு வாழ்வில்லை; இந்தியா வாழ்ந்தால் மேற்படி நாடுகளுக்குத் தாழ்வில்லை.

ஆசியாவின் சுதந்திர மாளிகைக்கு இந்தியாதான் அஸ்திவாரம் என்பதை ஆசிய நாடுகளின் தலைவர்களும் ஒப்புக்கொள்ளுகிறார்கள்.

• • •

சென்ற வருஷம் ஆகஸ்டு மாதம் 15-ம் பாரதநாடு சுதந்திரம் பெற்றது. நவம்பர் மாதத்தில் இலங்கை சுதந்திரம் பெற்றது.

இந்த வருஷம் ஜனவரி மாதம் 4-ம் தேதி ஞாயிற்றுக்கிழமை விடியற்காலம் சுபயோக சுப முகூர்த்தத்தில் பர்மா சுதந்திரம் பெற்றிருக்கிறது!

பர்மா கவர்னராக இருந்த சர் ஹியூபர்ட் ரான்ஸ் பர்மாவின் நிர்வாகத்தை பர்மியத் தலைவர்களிடம் ஒப்படைத்துவிட்டு, அன்றே கப்பலேறி விட்டார்.

பர்மா சர்க்கார் காரியாலயத்திலிருந்து கீழே இறக்கப்பட்ட பிரிட்டிஷ் கொடியையும் அவர் கையோடு எடுத்துக் கொண்டு போய்விட்டார்.

ஜெயபேரிகைகள் முழங்க, கோவில் மணிகள் கலகலவென்று ஒலிக்க, பர்மியர்கள் சுதந்திர விழாவை அலங்கார வைபவங்களுடனும் ஆனந்த பரவசத்துடனும் அமோகமாகக் கொண்டாடியிருக்கிறார்கள்.

அவ்வாறு புது வாழ்வு பெற்றுள்ள பர்மாவுக்கு இருதய பூர்வமாக வாழ்த்துக் கூறுகிறோம்.

• • •

பூகோள ரீதியாகவும், கலாசார ரீதியாகவும், ஆத்மார்த்த ரீதியாகவும் பாரத நாட்டுடன் நெருங்கிய தொடர்புள்ள பர்மா சுதந்திரம் பெற்றிருப்பதைக் குறித்து இந்தியர்கள் பெருமிதம் கொள்ளுவார்கள்.

பர்மாவுக்குச் சுதந்திரம் அளித்த பிரிட்டிஷ் சர்க்காரையும் இந்தச் சந்தர்ப்பத்தில் பாராட்ட வேண்டியது அவசியமாகும்.

சமீபத்தில் பிரிட்டிஷ் பிரதம மந்திரி ஸ்ரீ ஆட்லி ஓரிடத்தில் பேசியபோது, ஐரோப்பிய நாகரிகம் உருப்பட வேண்டுமாயின், உலக நாடுகள் பல்வேறு அடக்குமுறைகளுக்கும் ஆளாகாமல் சுதந்திரத்துடன் விளங்க வேண்டுமென்றும், அவ்வாறு விளங்குவதற்குப் பிரிட்டிஷ் தொழிற் கட்சி சர்க்கார் வழிகாட்டி வருவதாகவும் குறிப்பிட்டார். மேலும் பிரிட்டனின் முன்னை கன்சர்வேடிவ் கட்சி சர்க்காரோ அல்லது லிபரல் கட்சி சர்க்காரோ அவ்வாறு உலகத்துக்கு வழிகாட்ட முடியாதென்றும் ஆட்லி சொன்னார்.

ஆட்லி அவர்கள் கூறியது முற்றிலும் உண்மையே.

சென்ற மகா யுத்தம் முடிந்தபின் பர்மா விஷயத்தில் சர்ச்சில் சர்க்கார் எவ்வாறு நடந்து கொண்டார்கள் என்பதைக் கவனித்தவர்கள், ஸ்ரீ ஆட்லி கூறுவதை அப்படியே ஒப்புக் கொள்ளுவார்கள்.

மற்றும், சென்ற மகா யுத்தத்தில் பிரிட்டனுடைய உதவியாலும் அமெரிக்காவினுடைய உதவியாலும் தங்களைக் காப்பாற்றிக் கொண்ட பிரான்சும், டச்சு நாடும் இன்று செய்துவரும் ஆர்ப்பாட்டங்களைப் பார்க்கும்போது, இந்தியா, இலங்கை, பர்மா முதலிய நாடுகளுக்குக் கௌரவமான முறையில் சுதந்திரமளித்த பிரிட்டிஷ் தொழிற்கட்சி சர்க்கார், குறிப்பாக ஆசிய நாடுகளின் பாராட்டுதலுக்கு உரியவர்களாகின்றனர்.

எனவே, மேலே குறிப்பிட்டவாறு பிரிட்டிஷ் பிரதம மந்திரி பெருமை அடைவதில் தவறு எதுவும் இல்லை.

• • •

**ப**ர்மா சுதந்திரம் பெற்று விட்டதெனினும், இந்தியாவைப் போல் அதுவும் எத்தனையோ பிரச்னைகளைச் சமாளித்தாக வேண்டியிருக்கிறது.

சுதந்திரத்துக்காகப் பர்மா பிரமாதமான போராட்டம் எதையும் நடத்தவில்லை.

எனினும், சென்ற மகா யுத்தத்தின் போது பர்மா பட்ட கஷ்ட நஷ்டங்கள் அற்ப சொற்பமல்ல.

முதலில், பர்மாவிலிருந்து பிரிட்டிஷாரை ஜப்பானியர் விரட்டியடித்த போது நடந்த யுத்தத்திலும், பிறகு அங்கிருந்து ஜப்பானியரைப் பிரிட்டிஷார் விரட்டியடித்த போது நடந்த யுத்தத்திலும் பர்மிய நகரங்கள் நாசமாயின, பயிர்கள் பாழாயின, ஆலயங்கள் அழிந்தன.

எனவே, சுதந்திரம் பெற்றுள்ள பர்மா சுபிட்சமடையுமுன், மகத்தான புனருத்தாரண வேலைகளைச் செய்து முடிக்க வேண்டும்.

இரண்டு யுத்தங்கள் நடந்ததால் பர்மா தேசமெங்கும் ஆயுத வகைகள் சிதறிக் கொள்ளைக்காரர்களின் கையிலும் அரசியல் விரோதிகளின் கையிலும் அகப்பட்டிருக்கின்றன. எனவே, அந்த நாட்டில் கொள்ளைகளும், குட்டி அரசியல் போர்களும் நிகழ்ந்த வண்ணமிருக்கின்றன.

அரசியல் சதிகாரர்களுடைய வெறியின் விளைவாக, இணையற்ற தலைவர் திலகமான அவுங் ஸானை பர்மா இழந்து விட்டது.

ஆகையால், பல இன்னல்களும் தீர்ந்து பர்மா எதிர்காலத்தில் க்ஷேமமும் சுபிட்சமும் அடைவது, மற்ற ஆசிய நாடுகளின் உதவியையே, குறிப்பாக இந்தியாவின் ஒத்துழைப்பையே பொறுத்திருக்கிறது.

இந்தியாவின் நட்பைப் பர்மா பெரிதும் நாடுவதாக, சமீபத்தில் இந்தியாவுக்கு விஜயம் செய்திருந்த பர்மா பிரதம மந்திரி தாகின் நூ உறுதி கூறியது கூடிய சீக்கிரம் செயலில் நிறைவேறுமென்று எதிர்பார்க்கிறோம்.

• • •

**சு**வர்ண பூமி என்று பிரசித்தி பெற்ற சுதந்திர பர்மாவுக்கு, பாரத நாட்டின் சார்பில் பண்டித ஜவாஹர்லால் நேரு வாழ்த்துக் கூறியிருக்கிறார்.

“பர்மாவுக்கு அதிர்ஷ்டம் வந்தாலும் அல்லது துரதிர்ஷ்டம் நேர்ந்தாலும், பாரத நாட்டினர் பர்மியர்களுடன் தோளோடு தோள் நின்று அதில் பங்கெடுத்துக் கொள்ளுவார்கள். இது பர்மாவுக்கு மாத்திரமல்ல, இந்தியாவுக்கும் ஆசியாவுக்கும்கூட ஒரு மகத்தான புனித தினமாகும்.

“இதற்கு முன் வெகுகாலமாக இந்தியர்களும் பர்மியர்களும் ஒன்றுசேர்ந்தே மகத்தான கஷ்டங்களைக் கடந்து வந்திருக்கிறோம்.

“இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்னதாக இந்தியாவில் அவதரித்த அருந்தவ மாமுனிவரான கௌதம புத்தர் செய்த உபதேசமே நம்மை ஐக்கியப்படுத்தி வந்திருக்கிறது.

“அந்த மகான் உபதேசித்த தர்ம நியாயமும் சமாதானமும்தான் இன்றைய உலகை உய்விக்க வல்லது” என்று ஜவாஹர்லால்ஜி குறிப்பிட்டிருக்கிறார்.

எனவே, இந்தியாவிடம் மாத்திரமல்ல, பர்மாவிலுள்ள இந்தியர்களிடமும், மற்ற ஆசிய நாடுகளிடமும் பர்மிய சர்க்கார் சமாதானத்துடனும் தர்ம நியாயத்துடனும் நடந்து கொள்ளுவார்களாயின், பர்மா பெற்றுள்ள சுதந்திரம் நிரந்தரமாகி, பர்மாவுக்கு உலக நாடுகளிடையே சீரும் சிறப்பும் செல்வாக்கும் ஏற்படும்.

# முதற்கடமை


உங்கள் கடமையை சரிவரச் செய்யாவிட்டால், அதை நாங்கள் செய்து முடிப்போம்.
ஐ.நா. சபை
காஷ்மீரத்திலிருந்து கொள்ளையடித்த மூட்டை
SHASTRY

# கௌரவத்துக்குக் கருணை பலி

வேலை நிறுத்தம் செய்த என். ஜி. ஓ.க்களின் மீது சென்னை சர்க்கார் எடுத்துக் கொள்ளப் போகும் நடவடிக்கைகள் வெளியாகி யிருக்கின்றன. தேசத்தில் ஏற்பட்டிருக்கும் நெருக்கடியான நிலைமையில் எல்லா சர்க்கார் இலாகாக்களும் சர்க்கார் உத்தியோகஸ்தர்களும் முழு மனதுடனும் ஊக்கத்துடனும் வேலைசெய்ய வேண்டியது அவசியம். இந்த முக்கியமான விஷயத்தைச் சென்னை சர்க்கார் அடியோடு மறந்து விட்டார்களா அல்லது தங்களுடைய மாய கௌரவத்தையே பெரிதாகக் கருதிவிட்டார்களா என்று தெரியவில்லை. வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டவர்களை நாலு பிரிவாகப் பிரித்து நாலு விதத் 'தண்டனை'கள் அளித்திருக்கிறார்கள். 'தண்டனை' என்ற கடுமையான பெயர்தானே தவிர, காரியத்தில் எல்லாம் மிகவும் சாமான்ய விஷயங்கள் தான். என். ஜி. ஓ.க்கள் பெரிய நஷ்டம் எதுவும் அடைந்துவிடப் போவதில்லை; சர்க்காருக்கும் லாபம் ஒன்றும் கிடைக்கப் போவதுமில்லை. ஆனாலும் "வேலை நிறுத்தம் செய்தவர்களைத் தண்டித்து விட்டோம்" என்ற கௌரவத்தை அடையும்பொருட்டே இத்தகைய உத்தரவு போடப்பட்டிருப்பதாகக் காணப்படுகிறது. இது பெரிதும் வருந்தத்தக்க காரியம். பகைவனாகிய இராவணன் போர்க்களத்தில் தோல்வி யடைந்து நின்றபோது இராமர் அவனிடம் கருணைகொண்டு, "இன்று போய் நாளை வா!" என்றார். தங்களுடைய சொந்தச் சிப்பந்திகளின் விஷயத்தில் கனம் ராமஸ்வாமி செட்டியாரைத் தலைவராகக் கொண்ட சென்னை சர்க்கார் இராமர் பகைவனிடம் காட்டிய பெருந்தன்மையைக் கைக்கொண் டிருக்கலாம். "வேலை நிறுத்தம் முழுத்தோல்வி" என்று என். ஜி. ஓ. சங்கத் தலைவரே ஒப்புக் கொண்டிருக்கிறார். முழுத்தோல்வி யடைந்தவர்களிடம் கருணை காட்டிப் பெருந்தன்மையோடு முழுதும் மன்னித்து விட்டிருந்தால், அத்தகைய மன்னிப்புக்குப் பாத்திரமானவர்கள் பிற்பாடு எப்போதும் நல்ல முறையில் நடந்து கொள்வார்கள்; உற்சாகமாக வேலையும் செய்வார்கள். இப்போது இந்த அர்த்தமற்ற நாலுவிதத் தண்டனைகளைக் கையாண்டதினால் சர்க்கார் சிப்பந்திகள் மனக்கசப்பும் ஆத்திரமும் அடைவார்கள். மறுபடியும் அவர்களுக்கு யாராவது தப்புவழி காட்ட முன் வரும் போது அவர்களுடைய பேச்சுக்குச் செவி கொடுப்பார்கள். மீண்டும் தவறான வழிகளிலே இறங்குவார்கள். அதற்குச் சர்க்கார் மறுபடியும் கண்டிப்பான நடவடிக்கைகள் எடுக்க வேண்டியிருக்கும். இவ்விதமாக, சர்க்கார் இயந்திரம், — ஏற்கனவே கடகடத்துப்போய்ச் சரியாக வேலை செய்யாமலிருக்கும் இயந்திரம்,— மேலும் மேலும் கெட்டுக்கொண்டு வரும்.

• • •

சர்க்கார் நடவடிக்கை எப்படியிருந்த போதிலும், என். ஜி. ஓ.க்களின் கடமை என்னவென்பதை நமக்குத் தோன்றுகிறபடி தெரியப்படுத்த விரும்புகிறோம். அதற்குப் பூர்வாங்கமாகச் சில விஷயங்களையும் குறிப்பிடவேண்டியிருக்கிறது.

என். ஜி. ஓ. வேலை நிறுத்தத்துக்கு முன்னால், அதைக் குறித்து நாம் ஒன்றும் எழுதாமலே இருந்தோம். ஏனென்றால், "வேலை நிறுத்தம் செய்வோம்" என்று சொல்வதினாலே அவர்கள் ஏதாவது நன்மை அடைவதாயிருந்தால் அதற்கு நாம் குறுக்கே நிற்க விரும்பவில்லை.

கடைசி நேரத்தில், என். ஜி. ஓ. சங்கத் தலைவர்கள் ஏதாவது ஒருவித ராஜி செய்து கொள்வார்கள் என்று நம்பினோம். உண்மையாகவே வேலைநிறுத்தம் தொடங்குவார்கள் என்று நாம் எதிர்பார்க்கவில்லை. அவ்வளவு பிசகான, முறை தவறான, தேசத்துக்கும் தங்களுக்கும் கேடான காரியத்தில் இறங்குவார்கள் என்று நம்பவில்லை.

என். ஜி. ஓ.க்கள் வேலைநிறுத்தம் செய்தது பிசகு என்பதும். அது முழுத் தோல்வியாக முடிந்தது என்பதும் இப்போது ஸ்பஷ்டமாக வெளியாகி விட்டது.

தோல்விக்குக் காரணம், "என். ஜி. ஓ. க்களில் சில ஐந்தாம் படையினர் இருந்தது தான்" என்றும், "கையில் போதிய பணம் இல்லாததுதான்" என்றும் சங்கத் தலைவர்கள் சொல்கிறார்கள்.

இத்தகைய காரணங்களைச் சொல்வதிலிருந்தே, நிலைமையைச் சரியாக அறிந்து கொள்ளும் ஆற்றல் அவர்களுக்கு இல்லையென்று ஏற்படுகிறது.

என். ஜி. ஓ. வேலை நிறுத்தம் தோல்வியடைந்ததற்குக் காரணம்.—முக்கியமான ஒரே காரணம்.—அந்த வேலை நிறுத்தத்துக்குப் பொது மக்களின் ஆதரவு இல்லை என்பதுதான்.

காங்கிரஸ்காரர்கள் பிரிட்டிஷ் சர்க்காரை எதிர்த்துப் போராடியபோது அவர்களுக்குப் பக்க பலமாகப் பொதுஜனங்களின் அபிப்பிராயம் இருந்தது.

ஏனென்றால், காங்கிரஸ் வாதிகள் தங்களுக்காகப் போராடவில்லை; தங்கள் சொந்த நலத்துக்காகப் போராடவில்லை. தேசத்துக்காகப் போராடினார்கள்; தேச விடுதலைக்காகப் போராடினார்கள்.

தேசத்தில் பல தொழிலாளர் வேலை நிறுத்தங்கள் நேர்ந்திருக்கின்றன. இந்த வேலை நிறுத்தங்களில் பெரும்பாலும் பொதுமக்களின் ஆதரவு தொழிலாளருக்கு இருந்தது. ஏனெனில் தொழிலாளர்கள் ஏழைகள் என்ற எண்ணமும், முதலாளிகள் கொழுத்த பணக்காரர்கள் என்ற எண்ணமும் பொது மக்களின் மனதில் குடிகொண்டிருந்தன. எனவே, தொழிலாளி—முதலாளிப் போராட்டத்தில் பொதுஜன அபிப்பிராயம் அநேகமாகத் தொழிலாளர் பக்கமே இருந்து வந்தது.

ஆனால் இந்த மனோபாவமும் 1947 ஆகஸ்டு 15-க்குப் பிறகு பெரிதும் மாறுதல் அடைந்திருக்கிறது.

அந்தத் தேதியில் நமது ஒப்பற்ற, மாசற்ற, தியாகமூர்த்திகளான தேசத் தலைவர்கள் இந்திய யூனியன் சர்க்காரின் பொறுப்பை ஏற்றுக் கொண்டார்கள்.

எனவே, அந்தத் தேதிக்குப் பிறகு தொழிலாளிகள் ஆகட்டும், வேறு யார் தான் ஆகட்டும், தங்களுடைய குறைகளை முறையிட்டுக் கிளர்ச்சி செய்தும் தீர்த்துக் கொள்வதுதான் முறையே தவிர, வேலை நிறுத்தத்தைக் கைக்கொள்வது தவறு என்று பொது மக்கள் கருதுகிறார்கள்.

எத்தனையோ ஆண்டுகளாகக் கஷ்டப்பட்டுக் கிடைத்த தேசத்தின் சுதந்திரத்தை எந்தச் சிறு கூட்டத்தாரும் தங்களுடைய சுயநலத்துக்காக அபாயத்துக்கு உட்படுத்த முன் வருவது பெரும் அநியாயம்.

முதலாளிகள் அநீதி செய்தால் அதை நிவர்த்திக்க நமது தேசத் தலைவர்கள் இருக்கிறார்கள். ஏழைத் தொழிலாளிகளின் நலத்தைக் காட்டிலும் ஒரு சில பணக்கார முதலாளிகளின் நலத்தை ஒரு நாளும் நமது தலைவர்கள் பெரிதாக நினைக்கக் கூடியவர்கள் அல்ல.

அப்படியிருக்கும் போது, தொழிலாளிகள் ஏன் வேலை நிறுத்தம் செய்ய வேண்டும்? தேசத்தில் ஏற்கெனவே குடி கொண்டுள்ள பொருட் பஞ்சத்தை ஏன் அதிகமாக்கவேண்டும்?—பொது மக்களின் மனோபாவம் ஆகஸ்டு 15-க்குப் பிறகு இந்தவிதம் மாறி இருக்கிறது. ஆகையினால் தான், பக்கிங்காம்—கர்னாடிக் தொழிலாளிகள் வேலை நிறுத்தம் வெற்றிபெறவில்லை. கல்கத்தாவில் நடக்க விருந்த பொது வேலை நிறுத்தமும் நடக்கவில்லை.

தொழிலாளிகள் விஷயத்திலே கூறியது என். ஜி. ஓ. க்கள் விஷயத்தில் இன்னும் அதிகமாகப் பொருந்தும்.

என். ஜி. ஓ. க்கள் தங்களைத் தேச பக்தத் தியாகிகளுடனும், ஏழைத் தொழிலாளிகளுடனும் ஒப்பிட்டுக் கொள்வது பெருந் தவறு.

என். ஜி. ஓ. க்கள் தேச நன்மைக்காகவோ பொது நன்மையை முன்னிட்டோ வேலை நிறுத்தம் செய்யவில்லை.

தங்களுடைய சொந்தச் சம்பள உயர்வு—படிச் செலவு உயர்வு—ஆகியவற்றுக்காக வேலை நிறுத்தம் செய்தார்கள்.

என். ஜி. ஓ. க்கள் பணக்கார முதலாளிகளை எதிர்த்து வேலை நிறுத்தம் செய்யவில்லை.

பொதுஜன சர்க்காரை எதிர்த்து.—பொது ஜனங்களிடம் வரி வசூல் செய்து நிர்வாகம் நடத்தும் பொறுப்புள்ள சர்க்காரை எதிர்த்து—வேலை நிறுத்தம் செய்தார்கள்.

எனவே, அவர்களுக்குப் பொதுஜன அபிப்பிராயம் சாதகமாயில்லை.

• • •

பொது மக்கள் என். ஜி. ஓ. வேலை நிறுத்தத்தை ஆதரியாததற்கு இன்னும் இரு முக்கிய காரணங்கள் உண்டு.

ஏற்கெனவே பிரிட்டிஷ் அதிகார வர்க்க ஆட்சியிலே என். ஜி. ஓ. க்கள் கொடுத்த சம்பளத்தை வாங்கிக் கொண்டு சும்மா இருந்தார்கள். வேலை நிறுத்தம் என்ற பேச்சை எடுக்கவேயில்லை. இப்போது

பொதுஜன சர்க்கார் வந்ததும் வேலை நிறுத்தம் செய்கிறார்கள். அதுவும் ஜவா ஹர்லால்ஜியின் சர்க்கார் நடக்கும் காலத் தில் வேலை நிறுத்தம் செய்கிறார்கள். தவம் செய்து பெற்ற சுதந்திரக் குழந்தையைக் கொன்றுவிடப் பார்க்கிறார்கள்!

ஏற்கெனவே, அதிகார வர்க்க ஆட்சி யின்போது என். ஜி. ஓ. க்கள் பொது ஜனங்கள் விஷயத்தில் நடந்து கொண்ட முறையையும் பொதுஜனங்கள் இதற் குள்ளே மறந்து விடுவதற்கில்லை. நாற்பது ரூபாய் சம்பளம் பெற்ற குமாஸ்தா முதல் எல்லா சர்க்கார் உத்தியோகஸ்தர்களும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் பிரதிநிதி யாகத் தம்மை எண்ணிக்கொண்டு பொது ஜனங்களை அலட்சியம் செய்து வந் தார்கள்; அச்சத்தோடு தங்களிடம் வந்த வர்களைத் துச்சமாக நடத்தினார்கள். எந்த ஒரு சர்க்கார் காரியாலயத்துக்கும் ஒரு குடித்தனக்காரன் சென்று அகௌர வத்துக்கு ஆளாகாமல் காரியத்தை முடித் துக்கொண்டு திரும்பி வந்தான் என்பது அபூர்வ சம்பவமாகவே இருந்தது.

இந்த அநுபவங்களையெல்லாம் பொது ஜனங்கள் மறந்து விடுவதற்கு இன்னும் அவகாசம் போதவில்லை. சர்க்கார் உத்தி யோகஸ்தர்களே தங்களுடைய மனோ பாவத்தை இன்னும் முழுதும் மாற்றிக் கொண்டபாடில்லையே! பொது மக்கள் அதற்குள்ளே எப்படி மறந்துவிட முடியும்?

என். ஜி. ஓ.க்கள் தாங்கள் பொதுஜன ஊழியர்கள் என்பதை உணர்ந்து பொது ஜனங்களிடம் நல்ல படியாக நடந்து நாளடைவில் அவர்களுடைய அநுதாபத் தைப் பெற வேண்டும்.

மறுபடியும் முக்கியமான விஷயங்களை வரிசைப் படுத்திச் சொல்கிறோம்.

1. என். ஜி. ஓ. க்கள் வேலை நிறுத்தம் செய்தது பெருந் தவறு. தேச நலத்துக்கு விரோதமானது; அவர்களுடைய சொந்த நன்மைக்கும் பாதகமானது.

2. என். ஜி. ஓ. வேலை நிறுத்தம் முழுத் தோல்வி யடைந்ததற்கு முக்கிய காரணம் பொதுஜன அபிப்பிராயம் அதற்கு எதி ரிடையா யிருந்ததுதான்.

3. சென்னை சர்க்கார் இப்போது கைக் கொண்டிருக்கும் நடவடிக்கைகளை நாம் ஆதரிக்கவில்லை; கண்டனம் செய்கிறோம். ஆனாலும், அதைக் காரணமாகக் கொண்டு மறுபடியும் என். ஜி. ஓ.க்கள் முறை தவ றான காரியங்களில் இறங்கக் கூடாது.

4. சென்னை சர்க்கார் தங்களுடைய மாய கௌரவத்தைக் கருதிப் பெருந்தன் மையைப் பலி கொடுத்து விட்டார்கள்.

என். ஜி. ஓ. சங்கத் தலைவர்களும் அதே மாய கௌரவத்தைக் கருதிக் காரியம் செய்யக் கூடாது; அப்படிச் செய்தால், ஆயிரக் கணக்கான குடும்பங்களின் க்ஷேமத் தைப் பலி கொடுத்ததாகும்.

5. வேலை நிறுத்தம், சத்தியாக்கிரஹம் முதலிய முறைகள் தேச விடுதலைக்காகவும் பொது நன்மைக்காகவும் கையாளப்பட வேண்டிய காரியங்கள். சொந்த நன்மை களுக்காக அம் முறைகளைக் கையாண்டால் வெற்றி கிட்டாது.

6. மறுபடியும் என். ஜி. ஓ.க்கள் வேலை நிறுத்தம் முதலிய முறைகளைக் கையாண் டால் சர்க்காருக்கும் பொது மக்களுக்கும் சில கஷ்டங்கள் ஏற்படும் என்பது உண் மையே. ஆனால் அந்தக் கஷ்டங்களைச் சர்க் காரும் பொது மக்களும் ஒருவாறு சமாளித்துக் கொள்வார்கள். ஆனால் இரண்டாம் முறை தவறான காரியத்தைச் செய்தால் என். ஜி. ஓ.க்களால் சமாளிக் கவே முடியாது.

7. என். ஜி. ஓ.க்களின் குறைகளை நாம் நன்கு உணர்ந்திருக்கிறோம். அவர்க ளுடைய கோரிக்கைகளைப் பூரணமாக ஆதரிக்கிறோம். ஆனால் அந்தக் கோரிக்கை களைக் கட்டுக் கடங்கிய கிளர்ச்சி முறை களைக் கையாண்டே அவர்கள் நிறை வேற்றிக் கொள்ள வேண்டும்.

• • •

மேலே கண்டதையெல்லாம் படிக்கும் போது, நமது என். ஜி. ஓ. நேயர்களில் சிலருக்கு மிகவும் கசப்பா யிருக்கலாம். நம் பேரில் அவர்களுக்குக் கோபமும் வரலாம்.

கசப்பா யிருந்த போதிலும் உண்மை யைச் சொல்வது நமது நேயர்களுக்கு நாம் செலுத்த வேண்டிய கடமை என்று எண்ணியே எழுதி யிருக்கிறோம்.

இப்போதுள்ள மனோ நிலையில் அவர் களுக்குக் கோபம் உண்டான போதிலும் பின்னால் உண்மையை உணர்வார்கள் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

# மதுரைத் திருநாள்

பகீரதன்

புதன் கிழமை மாலை. எத்தனையோ வழிகளில் பெருமைப் படவேண்டிய வருஷம். தமிழ் நாட்டிலே சரித்திரப் பிரசித்தி பெற்ற பல திருவிழாக்களைக் கொண்டாடி மகிழ்ந்த 1947-ம் வருஷத்துக் கடைசி நாள். அன்று அஸ்தமிக்க வேண்டிய சூரியன் வழக்கத்துக்கு விரோதமாக நாலு மணிக்கே தன்னுடைய சுற்றுப் பிரயாணத்தை முடித்துக் கொண்டு சென்னை எழும்பூர் ரயிலடிக்கு வந்து விட்டான். இல்லாவிட்டால் அன்று மாலை நாலு மணிக்கே வானம் இருண்டு மப்பும் மந்தாரமுமாக இருந்திருக்குமா?

சிவபெருமானைத் தலைவராகக் கொண்டு தமிழ்ச் சங்கம் நடத்திய மதுரையில் நடக்கப் போகும் தமிழ்த் திருநாளுக்குச் செல்ல வேண்டிய தலைவர்களை வழியனுப்பச் சென்னைத் தமிழன்பர்கள் எழும்பூர் ரயிலடிக்கு வர ஆரம்பித்து விட்டனர். சட்டசபையில் தமிழிலேயே பேசும் நமது தமிழ்ப் பிரதமர் கனம் ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் தமிழ்த் திருநாளை ஆரம்பித்து வைப்பதற்குத் தயாராக வந்து விட்டார். தமிழ்த் திருநாள் வைபவத்தைச் சிறப்பிக்க கனம் டாக்டர் சுப்பராயன், கனம் பக்தவத்ஸலம், தமிழ்வளர்ச்சிக் கழகத்தின் பொக்கிஷதார் ட்ரோஜன் ஸ்ரீ அண்ணாமலைச் செட்டியார், சுதேசமித்திரன் ஆசிரியர் ஸ்ரீ ஸி. ஆர். சீனிவாசன், வடபாதிமங்கலம் ஸ்ரீ வி. எஸ். தியாகராஜ முதலியார், தமிழ்த் திருநாளில் தமிழிசை பாட இசையரசு தண்டபாணி தேசிகர், அவருடைய பக்கவாத்திய கோஷ்டிகள் எல்லாருமே வந்துவிட்டார்கள். எங்களுடைய வருகைக்காகக் காத்திருந்த திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸில் நாங்கள் உட்கார்ந்ததுதான் தாமதம், ரயில் இஞ்ஜினுக்குக் 'குஷி' கிளப்பிவிட்டது. சற்று நேரம் தமிழ்ப் புகை விட்டுவிட்டு 'வீல்' என்று ஒரு தமிழ் ஊதல் ஊதிவிட்டு 'ஜம்' மென்று கிளம்பிற்று. ரயில் ஓடும்போது, அதனுடைய சக்கரங்கள் "தமிழ் வாழ்க!" "தமிழ் வாழ்க!" என்று சொல்லிக் கொண்டே ஓடுவதாகத் தோன்றியது.

பொழுது புலர்ந்தது. புது வருஷமும் கூடப் பிறந்தது. ஆங்கிலப் புது வருஷந்தான்; ஆனால் அன்று தமிழ்த் திருநாள். திருநாள் நடைபெறும் மதுரை நகரம் வரும் வழியாக இல்லை. சூரியனையும் ஆகாயத்தில் காணவில்லை. எங்களுடனேயே சூரிய பகவானும் மதுரைக்கு டிக்கெட் வாங்கிக் கொண்டாரோ என்னமோ தெரியவில்லை. வானம் இருண்டு கிடந்தது.

கடைசியில் 7-30 மணிக்கு மதுரையில் வந்து வண்டி நின்றது. முதல் நாளே தமிழ் விழாத் தலைவரான இந்திய சர்க்காரின் நிதிமந்திரி ஸ்ரீ ஆர். கே. ஷண்முகம் செட்டியாரும், தமிழ்வளர்ச்சிக் கழகத் தலைவர் கல்வி மந்திரி கனம் அவிநாசிலிங்கம் செட்டியாரும், கனம் டாக்டர் ராஜனும் மதுரைக்கு வந்து விட்டார்களாம்! தமிழில் அவ்வளவு ஆர்வம் அவர்களுக்கு! ஆகவே மதுரைத் தமிழன்பர்கள் அன்று காலை ரயிலில் வந்தவர்களுக்கு ஒட்டிக்கு இரட்டியாக வரவேற்பு அளித்தார்கள். தமிழ் அன்பர்கள் புடைசூழ, மேள வாத்தியங்கள் கோஷிக்க, பூமாலைகளுடனும், பூரண கும்ப மரியாதைகளுடனும் தமிழ்த் திருநாள் வரவேற்பு சபைத் தலைவர் ஸ்ரீ பி. டி. ராஜனும், காரியதரிசிகள் ஸ்ரீ என். எம். ஆர். சுப்பராமனும், ஸ்ரீ எச். கிருஷ்ணசாமி பாரதியும் ரயிலடிக்கு வந்திருந்து பிரதம மந்திரி ரெட்டியார், டாக்டர் சுப்பராயன் முதலியவர்களுக்கு மாலை சூட்டி மகிழ்ச்சியுடன் வரவேற்றனர்.

★

ரயிலடியை விட்டு வெளியில் சென்றோம். தமிழ்த் திருநாளைக் கொண்டாட வந்த தலைவர்களுக்கு மரியாதை செய்ய யானையும் ஒட்டகமும்கூட வந்திருந்தன. கார்களேறிக் கொண்டு விடுதிக்குப் புறப்பட்டோம். நல்ல சகுனமாயிற்று; கழுதை

கத்திற்று. மதுரையில் எங்கே சென்றாலும் இந்தச் சகுனம் ஆகிக்கொண்டே இருந்தது. எனக்கு அப்பொழுதே தமிழ்த் திருநாள் வெற்றியுடன் முடிந்து விடும் என்ற பூரண நம்பிக்கையும் ஏற்பட்டு விட்டது.

மதுரை மீனாட்சி அம்மன் கோவிலிலிருந்து பண்டைக்காலத் தமிழ் இலக்கியச் சுவடி ஊர்வலம் ஆரம்பிப்பதற்கு ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. சுவடிகளை வரிசையாக அடுக்கி மாலை சூட்டி அழகாக அலங்கரித்த யானைமீது வைத்திருந்தனர். இன்னும் சில சுவடிகளை மலர் மாலைகளால் புஷ்ப விமானம்போல அலங்கரித்த வண்டியில் அலங்காரமாக அடுக்கி வைத்துச் சில தமிழ் அன்பர்கள் தாங்களே இழுத்துச் செல்லத் தயாராக நின்றனர்.

மேள வாத்தியங்கள் ஜாம் ஜாம் என்று முழங்க, ஆயிரக்கணக்கான தமிழ் அன்பர்களும் சாரணச் சிறுவர்களும் முன்னும் பின்னும் செல்ல, இன்னும் இரண்டு யானைகள் முதுகிலும் ஒட்டகத்தின் முதுகிலும் கட்டியிருந்த டமாரங்கள் வெற்றி முழக்கம் செய்து கொண்டு முன் செல்ல, தமிழ்ச் சுவடி ஊர்வலம் ஆரம்பமாயிற்று. சுவடிகளைச் சுமந்துகொண்டு யானையும், இலக்கியச் சுவடிகள் ஏற்றிய புஷ்ப விமானத்தை இழுத்துக் கொண்டு தமிழ் அன்பர்களும் பெருமிதத்துடன் ஊர்வலமாக வந்தார்கள். பின்னால் ஒரு கோஷ்டியார் இசையோடு தமிழ் பாடிக் கொண்டு வந்தனர். அவர்களுக்குப் பின்னால் மாணவர்கள் கூட்டமாகத் தமிழ்ப் பாட்டுகளை உணர்ச்சி ததும்பப் பாடி வந்தார்கள்.

மதுரைமா நகரின் முக்கியமான பெரிய வீதிகளில் ஊர்வலம் வந்தபோது வான மண்டலத்திலிருந்து மூன்று குல மன்னர்களும் தமிழ் வளர்த்த சங்க காலத்துப் புலவர்களும் பார்த்து மகிழ்ந்து தங்களுடைய ஆசியைச் சிறு சிறு மழைத் துளிகளின் மூலம் தெரிவித்துக் கொண்டார்கள்.

★

ஊர்வலம் முடிந்தவுடன் கல்யாண மண்டபத்தில் "தமிழ் நூல்—தமிழ்க் கலைக் கண்காட்சியை கனம் டாக்டர் ராஜன் திறந்து வைக்கப்போகிறார்" என்று கேள்விப்பட்டு மண்டபத்தை நோக்கி ஓடினேன். மண்டபத்துக் குள்ளேயும் மண்டபத்தைச் சுற்றியும் மகா ஜனக்கள் நெருக்கியடித்து நின்றுகொண்டிருந்தனர். கல்யாண மண்டபத்தையும் சுற்றுப்புறக் கட்டிடங்களையும் பார்த்தால் அவை கருங்கல்லால் கட்டினவை போலத் தோன்றவில்லை. மனிதர்களின் தலைகளாலேயே கட்டப்பட்டன போலிருந்தன. அங்கே கூடியிருந்த ஜனத்திரள் மீனாக்ஷி அம்மன் கோவிலையே புரட்டிக் கொண்டு போனாலும் போயிருக்கும்; நல்ல வேளையாகக் கோவில் நகரவில்லை. தமிழ் விழாவுக்கு இவ்வளவு ஜனக்கூட்டமா, இவ்வளவு பொதுஜன ஆர்வமா என்று நினைக்க நினைக்க ஒரே வியப்பாயிருந்தது.

தலைவர்கள் கல்யாண மண்டபத்துக்கு அருகில் வந்ததுதான் தாமதம். ஜனங்களுக்கு உற்சாகம் பீறிட்டுக் கொண்டது. பிறகு கேட்பானேன்? தலைகால் தெரியாமல் மண்டபத்தை நோக்கி ஒரு ஜனப்பிரவாகம் புரண்டு அடித்தது. தொண்டர்களும் போலீஸ் அதிகாரிகளும் தவியாய்த் தவித்துப் போனார்கள். தலைவர்கள் பழங்காலத்துப் பாண்டிய நாட்டு மறவர்களைப் போல மல்யுத்தம் செய்துகொண்டு தான் மண்டபத்திற்குள் பிரவேசிக்க வேண்டியிருந்தது.

இந்த மாதிரி கோலாகலத்துக்கு மத்தியிலே கனம் தி. சே. சௌ. ராஜன் 'தமிழ் நூல் — கலைக் காட்சி'யைத் திறந்து வைத்துப் பேச ஆரம்பித்தார். மண்டபத்திற்குள் மனிதர்களே கட்டுக் கடங்காமல் இருந்தபோது மனிதர்களால் செய்யப்பட்ட 'மைக்' கருவி மட்டும் சொன்னதைக் கேட்டு விடுமா?

மண்டபத்துக்கு வெளியே நின்றிருந்த ஆயிரக் கணக்கான மக்கள் "கேட்கவில்லை" "கேட்கவில்லை" என்று சத்தம் போடவும், சமிக்ஞையாகக் கையை விரித்துக் காட்டவும் ஆரம்பித்தார்கள். இந்தக் கூச்சல் கோலாகலம் ஒன்றையும் பொருட்படுத்தாமல் கனம் டாக்டர் ராஜன் பேசத் தொடங்கினார். டாக்டர் ராஜன் எவ்வளவு பிடிவாதக்கார மனிதர் என்பது இந்தச் சந்தர்ப்பத்தில் வெகு நன்றாக வெளியாயிற்று. "இப்படிக் கூச்சல் போட்டால் பேசமுடியாது என்று சொல்லிவிடுங்கள்!" என்று பிரதம மந்திரி கட்டளையிட்டதைக் கூடக் கவனியாமல், டாக்டர் ராஜன் தமிழின் மகிமையைப் பற்றிப் பிடிவாதமாகப் பேசிக் கொண்டே போனார். சுமார் முக்கால் மணி நேரம் பேசினார்.

டாக்டர் ராஜனுடைய மன உறுதிக்கு முன்னால் மக்களின் கூச்சல் தோல்வியடைந்து பேச்சின் கடைசிப் பகுதியில் அமைதி நிலவியது. இந்திய அரசாங்கத்தில் ஒரு தமிழ் மகன் நிதிமந்திரி பதவி வகிப்

பதையும், இன்னொரு தமிழ் மகன் மேற்கு வங்காளக் கவர்னர் பதவி வகிப்பதையும் டாக்டர் பெருமையுடன் குறிப்பிட்டபோது மதுரை மக்களும் பெருமித மடைந்து ஆரவாரித்தார்கள்.

கடைசியில் ஸ்ரீ எல். கிருஷ்ணசாமி பாரதி அவர்கள் தமக்கே உரிய உரத்த குரலிலும் அழகான தமிழிலும் வந்தனோபசாரம் கூறி முடித்தபின் கலைக்காட்சித் திறப்பு விழா முடிந்தது.

அந்தக் கூட்டத்தை விட்டு வெளியில் வந்தவுடன் என்னுடைய அங்கங்கள் எல்லாம் சரியாக இருக்கின்றனவா என்று எண்ணிப் பார்த்தேன். சோமசுந்தரக் கடவுள் புண்ணியத்தில் எல்லா அங்கங்களும் சரியாக இருந்தன. ஆனால் என்னுடன் வந்த நண்பர் மட்டும் என்னை அடையாளம் தெரிந்து கொள்ள முடியாமல் வெகுநேரம் தவித்து விட்டு "என்னப்பா இப்படி நீண்டு விட்டாய்? ஒரு நாளிலேயே ஒரு சாண் வளர்ந்து விட்டாயே!" என்று வியப்புடன் கேட்டார்.

"ஒன்றுமில்லை; டாக்டர் ராஜன் திறந்து வைத்த தமிழ்க் கலைக் காட்சியைப் பார்க்கப் போயிருந்தேன். அந்த வைபவத்தைப் பார்த்ததில் ஏற்பட்ட உற்சாகத்தினால் என் உடம்பு அவ்வளவு பூரித்து உயர்ந்து விட்டது! நம்மாழ்வார் பாடல்களைக் கேட்ட ஸ்ரீரங்கநாதரின் தோள்களைப் போல!" என்றேன்.

கலைக் காட்சியிலிருந்து திரும்பும்போது புது மண்டபத்திலும் மீனாக்ஷி அம்மன் கோவிலின் பல பகுதிகளிலும் தமிழின் பெருமையைக் குறித்த வாசகங்கள் எழுதப் பட்டிருந்தன. தமிழின் தனிச் சிறப்பு வாய்ந்த "ழ"காரத்துக்கு ஒரு இடத்தில் முக்கியத்துவம் கொடுத்து எழுதி இருந்தது. "மாதர் தம்மை இழிவு செய்யும் மடமையைக் கொழுத்துவோம்" என்ற வாசகத்தைப் பார்த்தவுடன், இந்தப் போர்டை எழுதிய சித்திரக்காரர் தமது தமிழ் உணர்ச்சியையும் 'ழ'காரத்தின்மீது தமக்குள்ள அபார ஆசையையும் காட்டியிருக்கும் முறையை எண்ணி வியந்தேன்!

★

பிற்பகல் மூன்று மணிக்குப் புது மண்டபத்தில் தமிழ்த்திருநாள் ஆரம்பமாகு மென்று அறிவிக்கப் பட்டிருந்தது. இந்தக் கூட்டத்திற்கு எப்படிப் போய்ச் சேர்வது என்ற எண்ணம் இரண்டு மணி முதற் கொண்டே என் மனதைக் கலவரப்படுத்த ஆரம்பித்துவிட்டது. காலையில் கல்யாண மண்டபத்தில் கிடைத்த அனுபவத்திலிருந்துதான் இந்தக் கலவரம் ஏற்பட்டது.

இருந்தாலும், என் மனக் கலவரத்தை ஒரு 144-வது உத்திரவு போட்டு அடக்கி விட்டுத் திருநாளுக்குப் புறப்பட்டேன்.

கோவிலுக்கருகில் நான் எதிர்பார்த்தது போலவே கூட்டம் அபாரமா யிருந்தது. ஆயினும் முண்டியடித்துக் கொண்டு சென்றேன். புது மண்டபத்துக்குள்ளும் பிரவேசித்து விட்டேன். மண்டபத்திலும் என் விழுந்தால் எண்ணெயாகப் போகும்படி கூட்டம் நெருக்கி அடித்துக் கொண்டு தானிருந்தது! ஆனாலும் அங்கு பூரண அமைதி நிலவிற்று.

காலையில் கலைக் காட்சித் திறப்பின் போது ஏற்பட்ட அநுபவம் வரவேற்புக் கழகத்தாருக்கு நல்ல படிப்பினையாயிற்று. மாலையில் புது மண்டபத்தில் ஒன்றுக்கு நாலு ஒலி பெருக்கிகள் வைத்து விட்டதுடன் மண்டபத்துக்கு வெளியிலேயும் நன்றாகக் கேட்கும்படி ஏற்பாடு செய்து விட்டார்கள். எனவே, அன்று மாலையும் மறுநாளும் தமிழ்த் திருநாள் மிக அமைதியாகவும் சிறப்பாகவும் நடந்தது.

தெய்வத் தமிழ் மொழியில் தேவாரப் பாடல் பாடிக் கடவுள் வணக்கம் செய்த பிறகு, தமிழ்த் திருநாள் வரவேற்புக் கமிட்டித் தலைவர் ஸ்ரீ பி. டி. ராஜன் தலைவர்களை வரவேற்றுப் பேசினார்.

"தமிழ் வளர்ச்சிக் கழகத் தலைவர் ஸ்ரீ அவினாசிலிங்கம் செட்டியார் அவர்களின் முயற்சியினால் இந்தத் தமிழ்த் திருநாள் மதுரையில் நடைபெறுகிறது. சுமார் ஆறாயிரம் வருஷங்களுக்கு முன்னாலிருந்தே தமிழர்கள் நாகரிகத்தில் சிறந்தவர்கள் என்று ஆராய்ச்சியாளர் கண்டு பிடித்திருக்கின்றனர். தற்பொழுது தமிழ்நாட்டு எல்லை சுருங்கி இருந்தாலும் தமிழ் மக்கள் உலகம் முழுவதிலும் பரவி இருக்கிறார்கள். காலவேறுபாட்டால் தமிழன் அடிமைப் பட்டுத் தன்னுடைய கலையை மறந்திருந்தான். சுதந்திரம் பெற்ற தமிழகத்தில் தமிழின் பெருமையை நிலைநாட்டி வளர்க்கத் தமிழ் வளர்ச்சிக் கழகம் வேலை செய்ய ஆரம்பித்திருக்கிறது," என்று ஸ்ரீ பி. டி. ராஜன் சொன்னபோது தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் தொண்டுக்கு ஆதரவு காட்டுவதற்கு அறிகுறியாகத் தமிழ் மக்கள் கை கொட்டி ஆரவாரம்செய்தனர். (தொடரும்)

## மாதர் மகாநாடு

அகில இந்திய மாதர் மகாநாட்டின் வரவேற்பு சபைத் தலைவர் ஸ்ரீமதி அம்புஜம்மாள் பிரதிநிதிகளை வரவேற்கிறார்.



ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியும் அவருடைய புதல்வி செள. ராதாவும் பிரார்த்தனை பாடி மகாநாட்டைத் துவக்கி வைக்கிறார்கள்.







இடைவிடாத் தொண்டு புரிந்து மகாநாட்டைச் சிறப்பாக நடத்திவைத்த ஸ்திரீ தொண்டர்களில் ஒருவர் ஸ்ரீமதி வஸுமதி.



சென்ற ஆண்டின் மகாநாட்டுத் தலைவி லேடி ராமராவ் பேசுகிறார்.





அகில இந்தியாவிலிருந்தும், அப்பாலுள்ள இந்தோனேஷியா முதலிய நாடுகளிலிருந்தும் பிரதிநிதிகள் விஜயம் செய்து மாதர் மகாநாட்டைச் சிறப்பித்தார்கள். (கீழ் வட்டத்துக்குள்ளே, மாதர் மகாநாட்டின் ஸ்தாபகர்களில் ஒருவரான ஸ்ரீமதி கஸின்ஸ்.)









மாதர் மகாநாட்டின் அக்ராசனர் ஸ்ரீமதி அனசூயா பாய் காலே தலைமைப் பிரசங்கம் செய்கிறார்.

இந்திய அரசாங்கத்தின் சுகாதார மந்திரி ராஜகுமாரி அமிருத கௌரியும், பம்பாயின் முதல் ஷெரிப் ஸ்ரீமதி மித்தன் லாம் முதலிய பல பெண்மணிகளும் பேசினார்கள்.

(வட்டத்துக்குள்ளே, மகாநாட்டுக்கு விஜயம் செய்த சென்னைக் கவர்னர் தம்பதிகள்.)





# மாப்பிள்ளைக்கு ஒரு கடிதம்

விதூஷகன்

சிரஞ்சீவி மாப்பிள்ளைக்கு அநேக ஆசீர்வாதம்.

இந்த வருஷம் தலை தீபாவளிக்கு நீ வந்து விட்டுப் போனது முதல் உனக்குக் கடிதம் எழுத வேண்டுமென்று ஆசை.

உன்னை என் மாப்பிள்ளையாக அடைவதற்கு முன்னால் மாப்பிள்ளைகளைப் பற்றி நான் கொண்டிருந்த அபிப்பிராயமே வேறு! தெருவில் யாராவது ரொம்ப 'ஸ்டைல்'லாக நடந்து சென்றால், "மாப்பிள்ளை மாதிரி நடையைப் பாரு!" என்பேன். சங்கோஜப் பிராணி யாரையாவது கண்டால், "புது மாப்பிள்ளை மாதிரி இப்படிக் கூச்சப்படுகிறீர்களே!" என்பேன்!

அது மட்டுமா? வரன் தேடுகிறேன் என்று சில ஆசாமிகள் வெயில் என்றும் மழை என்றும் பாராமல் ஜாதகக் கட்டைத் தூக்கித் தோளில் போட்டுக் கொண்டு வருஷக் கணக்கில் 'லோ லோ' என்று அலைகிறார்கள்! இவர்களுக்கெல்லாம் மூளையே இருப்பதில்லை! ஒரு 'காலேஜ் ஹாஸ்டல்', ஆபீஸ்கள், பாங்க் இப்படி ஏதாவது சில குறிப்பிட்ட இடங்களில் வாசலில் போய் நின்று கொள்ள வேண்டியது! உள்ளே போகிற வருகிற பையன்களைக் கவனித்து, "உனக்குக் கல்யாணம் ஆகிவிட்டதா?" என்று விசாரித்துக் கொண்டிருந்தால் வரன் லகுவில் கிடைத்துவிட்டுப் போகிறது! என்று ஜம்பம் பேசும் ஆசாமிகளில் நானும் ஒருவனாகத்தான் இருந்தேன்! ஆனால் உன்னைத் தேடிக் கண்டு பிடிப்பதற்குள் நான் பட்ட சிரமம் அந்த வேதபுரீஸ்வரருக்குத் தான் தெரியும்! உன்னைக் கண்டு பிடித்த பிறகு உன்னை என் மாப்பிள்ளையாக்கிக் கொள்ள நான் பட்ட கஷ்டம் உனக்கும் உங்க அப்பாவுக்கும் தான் தெரியும்!

இதிகாச புராண காலத்திலெல்லாம், ஒருவர் மாப்பிள்ளையாக வேண்டுமானால் கேவலம் ஒரு வில்லை முறித்தோ, கீழே ஜலத்தில் விழும் பிம்பத்தைப் பார்த்துக் கொண்டு மேலே இருக்கும் லக்ஷியத்தை அடித்து வீழ்த்தியோ, மலையைக் குடைந்தோ அல்லது மணலைக் கயிறாகத் திரித்தோ, இப்படி ஏதாவது ஒரு 'சர்க்கஸ்' செய்து காண்பித்தால் தான் பெண்ணைக் கொடுப்பார்கள்! மாப்பிள்ளைகளின் வீரம், தைரியம், பலம், செல்வம், அறிவு இவற்றைச் சம்பந்தப் பட்டவர்கள் அறிந்து கொள்ள இம்மாதிரி சந்தர்ப்பங்கள் அளித்தார்கள். கல்யாணப் பெண்ணும் தான் ஒரு வீரனை, தைரியசாலியை, பலவானை, செல்வந்தனை, பிருகஸ்பதியைத் தான் மணந்து கொள்ளப் போகிறோம் என்று திருப்திகொள்ள ஏதுவாக இருந்தது! இதெல்லாம் மக்கி, மாண்டு, மடிந்துப் போன வழக்கங்கள்! நீ இருபதாம் நூற்றாண்டில் எனக்கு மாப்பிள்ளை! "பெண்ணுக்குப் பாடத் தெரியுமா? படிக்கத் தெரியுமா? ஆடத் தெரியுமா?" என்று பெண்களைச் சோதனை செய்யும் காலத்தில் நீ எனக்கு மாப்பிள்ளை! நீ பெண் பார்க்க வந்தபோது, நீயும் உன்னைச் சேர்ந்தவர்களும் முள் வேலிமாதிரி பின்னிப் பின்னிக் கேள்விகளைப் போட்டபோது வாஸ்தவமாக நான் என்ன எண்ணினேன் தெரியுமா? "ஈஸ்வரா! காலம் மாறவேண்டும்! பெண்கள் பையன்களைத் தேர்ந்தெடுக்கும் காலம் வரவேண்டும்! கல்யாணம் செய்து கொள்ளுகிறேன் என்று (தைரியமாக!) முன் வருகிற பையனைக் கூப்பிட்டு சென்னைப் பட்டணத்தில் ஒரு வீடு பார்த்துக்கொண்டு வரச் சொல்ல வேண்டும்! அவனைக் கொண்டுபோய் ஒரு 'க்யூ'வில் நிறுத்தி அவன் பொறுமையைச் சோதிக்க வேண்டும்!" என்று தான் எண்ணினேன்!

'மாப்பிள்ளை முறுக்கு' என்றால் வெகு அலக்ஷியமாக எண்ணிக் கொண்டிருந்தேன்! நீ எனக்கு மாப்பிள்ளையான பிறகு இந்த அலக்ஷியம் போய் விட்டது! அது அசல் சீடை முறுக்கைவிடக் கடினமானது; முறுக்கேறிய தேர் வடத்தைக் காட்டிலும் முறுக்கானது என்பதைத் தெரிந்துகொண்டு விட்டேனடா, அப்பா! "வைர மோதிரம் செய்து போட்டால் தான் தலை தீபாவளிக்கு வருவேன்!"

என்று நீ விறைத்துக்கொண்டு சத்தியாக்கிரகம் செய்தாயே! அது ஒன்று போதாதா?

தீபாவளிக்கு நீ வருகிறாய் என்றதும் இங்கே வீடு என்ன கிர்த்தாளிப்பட்டது தெரியுமோ? உனக்கு 'மைசூர் பாக்' என்றால் உயிர் என்று அதற்குள் உன் மாமியார் கண்டு பிடித்து விட்டாள்'! அதைச் செய்ய வேண்டுமென்றாள் உடனே! நான் அவளைக் கலியாணம் செய்து கொண்டு எவ்வளவு வருஷங்களாயிற்று? எனக்கு என்ன என்ன பிடிக்கும், எதில் உயிர் என்று அவளுக்கு இன்றும் தெரியாதடா, அப்பனே! 'மைசூர் பாக்' என்றால் லேசான காரியமா இப்போது? அதற்கு வேண்டிய கடலை மாவுக்காக நான் ஏழு கடலையும் தாண்டினது ஸ்ரீ ஆஞ்சநேய ஸ்வாமிக்குத்தான் தெரியும்! சர்க்கரைக்கு நான், கரும்புக் கொல்லை அதிகாரியிலிருந்து கண்ட்ரோல் ஆபீஸ் குமாஸ்தாவரை பேட்டி கண்டது சாக்ஷாத் ஈஸ்வரனுக்குத்தான் தெரியும்! திரட்டுப்பால் செய்ய, பட்டணத்து வீதிகளில் இரண்டு சொம்பு பாலுக்காக நான் அலைந்தது கோபாலனுக்குத்தான் தெரியும்! இதெல்லாம் கிடக்கட்டும்! நான்கு பலம் காப்பித் தூளுக்காக நான் கணக்கில் 'க்யூ'வில் பட்டினியோடு பழி கிடந்து அவஸ்தைப் பட்டது என்னைத் தவிர வேறு யாருக்குமே தெரியாதடா, குழந்தாய்!

அவள் இருக்கிறாளே — அவள்தான் — உன் மாமியார் — அவள் சில பக்ஷணங்கள் செய்வாள்! இந்த உலகிலேயே மிகக் கடினமான வஸ்துக்கள் அவை! அவற்றை அப்படிச் செய்வதற்காக அவள் எடுத்துக் கொள்ளும் பிரயாசைக்குத்தான் உண்மையில் 'இமாலயப் பிரயத்தனம்' என்று பெயர்! அப்படியிருந்தும் அவள் செய்த முறுக்கை நீ வாயில் போட்டு நொறுக்கி த்வம்சம் செய்து விட்டாயே! அந்தப் பொருவிளங்காய் உருண்டை என்ற பெளதிகப் பொருளைக் கொஞ்சங்கூடப் பொருட்படுத்தாமல் நீ ஹதம் செய்த காட்சி இன்றும் என் மனதை விட்டு அகலவேயில்லை! தேன்குழல் என்ற இனிமையான பெயரில் அவள் செய்த எஃகுக் கம்பியை நீ ஜீர்ணம் செய்த அழகு ஒன்றே போதுமே! மாப்பிள்ளை! உன் உடம்பைப்பற்றி இனிமேல் கவலையே படமாட்டேன்! கண்ணாடித் துண்டுகளைக் கற்கண்டு மாதிரி 'கரகர' வென்று கடித்துத் தின்றாலும் அது உன்னை ஒன்றும் செய்யாது! அரை வீசை இரும்பு ஆணியை அலக்ஷியமாய் விழுங்கலாம்!



ஜாதகக்கட்டைத் தோளில்............

அதன் ஜம்பம் உன்னிடம் சாயாது! கடப்பாரையை முழுசாக விழுங்கு! சுக்குக் கஷாயம் சாப்பிட வேண்டுமென்று அவசியமேயில்லை உனக்கு! இந்த ரேஷன் அரிசியும் மக்காச் சோள மாவும் உன்னை ஒன்றும் செய்துவிட முடியாதடா, அப்பனே! தீர்க்காயுஷ்மான் பவ!

நீ தீபாவளிக்கு வந்து போனதிலிருந்து உன் ஞாபகம் இல்லாத நேரமே கிடையாது! ஜவுளிக் கடை மாரி முத்தாப் பிள்ளையும் பால்காரக் கங்காதீர்த்த கோனாரும் தீபாவளிக் கடனைத் தீர்க்கும் படி தடவைக்குத் தடவை கேட்கும் போது உன் ஞாபகம் வராமல் எங்கேயடா அப்பா போகும்?

கடிதம் நீண்டு விட்டது! அதற்குக் காரணம் உன்னிடம் எனக்கு ஏற்பட்ட நீண்ட அனுபவம்தான்! நான் வேடிக்கையாக எழுதியதை விகல்பமாக எடுத்துக் கொள்ளாதே! மாமனார் — மாப்பிள்ளை அனுபவங்களும், மாமியார் — மாட்டுப் பெண் சச்சரவுகளும் இந்த உலகம் உள்ளவரை இருக்கும்! அவற்றிற்குச் சிரஞ்சீவித்துவம் உண்டு! வாழ்க்கை சுவாரஸ்யமடைவதற்கும் இவைதான் காரணம்!

செளபாக்யவதி மீனாக்ஷி உன்னைப் பற்றிப் பேசும்போதெல்லாம் குதூகலமடைகிறாள். இந்த வருஷம் பொங்கல் சுதந்திரப் பொங்கல்! நீ அவசியம் புறப்பட்டு வந்து சேர்!

உன் அன்புள்ள
மாமனார்.



# ராஜகுமாரியின் கர்வம்



மணி

ஒரு தேசத்தில் ராஜகுமாரன் ஒருவன் இருந்தான். அவனுக்கு வேட்டை யாடுவதில் பிரியம் அதிகம். ஒருநாள் வேட்டை யாடுவதற்காகக் காட்டில் வெகு தூரம் போனான். ரொம்ப தூரம் போனதனால் அவனுக்குக் களைப்பு உண்டாயிற்று. நாக்கு வறண்டது. தண்ணீரைத் தேடிச் சென்றான். எவ்வளவோ தூரம் தேடி அலைந்தும் தண்ணீர் அகப்படவில்லை.

ராஜகுமாரன் தாகத்தினாலும் அலைச்சலினாலும் களைப்படைந்து கவலை தோய்ந்த முகத்துடன் ஓரிடத்தில் உட்கார்ந்தான். சிறிது நேரங் கழித்து ஒரு முயல் எதிர்ப்பட்டது. அரசகுமாரன் கவலையோடு உட்கார்ந்திருப்பதைக் கவனித்தது. "ராஜகுமாரனே! ஏன் மிகவும் கவலைப் பட்டுக் கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டது.

"தாகத்தினால் கஷ்டப்படுகிறேன். வெகு தூரம் தேடியலைந்தும் தண்ணீர் கண்ணில் தென்படவே யில்லை" என்று அரசகுமாரன் வருத்தத்துடன் பதில் கூறினான்.

"இதற்குத்தானா, பிரமாதம்! நான் தண்ணீர் இருக்குமிடத்தைக் காட்டுகிறேன்" என்று கூறியது. பிறகு அரசகுமாரனை ஜலம் இருக்குமிடத்திற்கு அழைத்துச் சென்றது. அரசகுமாரன் தாகத்தைத் தணித்துக் கொண்டான். "போய் வருகிறாயா?" என்று முயல் கேட்டது. ராஜகுமாரனுக்குத் தனக்கு உதவி செய்த முயலை விட்டுவிட்டுப் போக மனமில்லை. "நீ என்னுடன் வருகிறாயா?" என்று கேட்டான். முயலும் சம்மதித்தது. ராஜகுமாரன் முயலை எடுத்துக் கொண்டு தன் நாட்டை அடைந்தான்.

அரண்மனையில் அந்த முயலுக்குத் தனி இடம் ஏற்பாடு செய்து, அதற்கு ஆகாரம் கொடுத்துவிட்டுப் பின் தன் படுக்கைக்குச் சென்றான்.

மறுநாள் காலையில் ராஜகுமாரன் எழுந்ததும் தன் கண்களையே அவனால் நம்ப முடியவில்லை. முயலுக்குப் பதிலாக ஒரு அழகிய ராஜகுமாரி தூங்கிக் கொண்டிருந்தாள். அரசகுமாரனுக்கு அவளுடைய கதையை அறிய ஆவல் மிகுந்தது. ராஜகுமாரி எழுந்ததும் எதிரில் ராஜகுமாரன் நிற்பதைக் கண்டாள். வெட்கத்தினால் தலை குனிந்தாள். ராஜகுமாரன் அவள் கதையைக் கூறுமாறு கேட்டான்.

ராஜகுமாரி தைரியத்துடன் பின் வரும் கதையைச் சொல்ல ஆரம்பித்தாள் :—

"நான் மிதுனபுரி அரசனின் மகள். என்னை ஒரு முட்டாள் அரசகுமாரனுக்கு மணம் முடிக்க என் தந்தை ஆசைப்பட்டார். எனக்குப் பிடிக்கவில்லை. காட்டிற்கு ஓடலாமென்று தோன்றியது. ஆனால் அதைச் செய்ய எனக்கு மனமில்லை.

"ஒருநாள் ஒரு தேவதை என்னிடம் வந்தது. நான் வேண்டுமென்றே அதைப் பொருட்படுத்தவில்லை. என் அழகைப் பற்றிக் கர்வப்பட்டுக் கொண்டிருந்தேன். தேவதைக்குக் கோபம் வந்து விட்டது. என்னை

முயலாகச் சபித்துவிட்டது. உடனே காலில் விழுந்து மன்னிக்கும்படி கேட்டேன். 'நீ எப்பொழுது உன்னை யறியாமல் ஒருவருக்கு உதவி செய்வாயோ மறுநாள் உன் சாபம் நீங்கும். நீ பழையபடி ராஜகுமாரியாவாய்' என்று கூறி மறைந்தது. நான் முயலாக மாறின பிறகு எனக்கு அரண்மனையி லிருக்கப் பிரியமில்லை. நேரே காட்டுக்குப் போய்ச் சேர்ந்தேன்.



"காட்டில் பல மிருகங்களுடன் பழகினேன். ஆனாலும் 'எனக்குச் சீக்கிரம் ராஜகுமாரியாக வேண்டும் என்ற ஆசை வளர்ந்தது. அதனால் பலருக்கு உதவி செய்தேன். ஒன்றும் பலனில்லாமல் போய்விட்டது. ஆனால் உங்களுக்கு என்னையறியாமல் உதவி செய்தேன். பலன் கிடைத்தது. மறுபடியும் ராஜகுமாரியானேன்" என்று சொல்லி முடித்தாள். "முயலாக யிருந்த என்னைக் காட்டிலிருந்து எதற்காகத் தூக்கிக் கொண்டு வந்தீர்கள்?" என்று ராஜகுமாரி கேட்டாள்.

ராஜகுமாரன் சமயோசிதமாகப் பதில் கூறினான்: "எனக்கு ஒரு தேவதை பிரசன்னமாகி, 'நீ ஒரு முயலை எடுத்து வளர்ப்பாய். அது இராஜகுமாரியாக மாறும். அதை மணம் செய்து கொள்ளுவாய்' என்று கூறிவிட்டு மறைந்தது. உன்னைப் பார்த்ததும் அந்த தேவதையின் வாக்கு என் ஞாபகத்துக்கு வந்தது. அதனால் உன்னைத் தூக்கிக் கொண்டு வந்தேன்" என்றான். ராஜகுமாரிக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. ராஜகுமாரன் சொன்னது பொய் என்று அவளுக்கு எப்படித் தெரியும்?

அப்புறம் கேட்க வேண்டுமா? அந்த ராஜகுமாரனுக்கும் ராஜகுமாரிக்கும் பிரமாதமாகத் திருமணம் நடந்தது.



கல்கத்தா தென்னிந்திய ஸ்திரீகள் சங்க 20-வது வருஷக் கொண்டாட்டம். (மேற்கு வங்காள கவர்னரான மேன்மை தங்கிய ஸ்ரீ ராஜாஜி அவர்களின் குமாரி) ஸ்ரீமதி நாமகிரியின் தலைமையில் 18-12-47ல் நடைபெற்றது. மத்தியில் ஸ்ரீமதி நாமகிரி, அவருக்கு அடுத்து சங்கத் தலைவி ஸ்ரீமதி சீதாலக்ஷ்மி சிவராமகிருஷ்ணன்.

## நீங்கள் கவனிக்க வேண்டியது !



குணம் நிறைந்த
கோகுல் சந்தன்
தைலம்

சந்தனுக்கு சிறந்த மண
மும் மிகுந்த வனப்பும்
நிறைந்த வளர்ச்சியும் தரு
கிறது-ஆயிரக்கணக்கான
மக்கள் அதையே உப
யோகிப்பதன்
உண்மையும்
அதுவே






கோகுல் டிரேட் மார்க்
கவனித்து
வாங்குங்கள்

**டி. எஸ். ஆர். & கோ.**
**கும்பகோணம்**

மதராஸ் ஏஜண்டு :
**புஷ்பவனம் ஸ்டோர்ஸ்**
பைகிராப்ட்ஸ் ரோடு.
திருவல்லிக்கேணி :: மதராஸ்

கோவை, நீலகிரி ஜில்லாக்கள்
& பாலக்காடுக்கு ஏஜண்டு :
**B. பால்பட்டாபி,**
வைசியாள் தெரு. கோயமுத்தூர்

# "எவர்ஸில்வர்"
## பாத்திரங்கள்

வெள்ளியின் அந்தமும் இரும்பின்
உறுதியும் ஒருங்கே கொண்டவை
(பம்பாய் தேனிதயான் கம்பெனியாரால்
தயாரிக்கப்பட்டவை)



தென்னிந்தியாவிற்குப் பூரண
விநியோகஸ்தர்கள் :

## ஸாம்ஸன் & கோ.

எஞ்சின், எலெக்ட்ரிக் மோட்டார்,
பம்பு ஸெட் டீலர்கள்
8/22, பிராட்வே, மதராஸ்
தந்தி: "BARAPASH"] [போன்: 4521



வெளியூரில் கிடைக்குமிடம் :

திருச்சி ஜில்லாவிற்கு :
**S. T. P. R. சிதம்பரம்**
63 வடக்குச் சித்திரை வீதி, ஸ்ரீரங்கம்

மலபார், கொச்சி, திருவனந்தபுரத்துக்கு:
**மெஸர்ஸ் சுரேஷ் & கோ.**
தெத்தூர் ரோடு, எர்ணாகுளம் & திருச்சூர்

சேலம் ஜில்லாவிற்கு :
**எஸ். வி. ராமநாதன்**
**C/O சூடாமணி ஸ்டோர்ஸ்**
தில்லைநகரம், நாமக்கல் (சேலம்)

தஞ்சை ஜில்லாவிற்கு :
**எம். வி. எம். ஸ்டோர்ஸ்**
கும்பேஸ்வரர் சன்னதித் தெரு
கும்பகோணம்

சித்தூர், செங்கல்பட்டு, வட ஆற்காடு, திருநெல்வேலி ஆகிய ஜில்லாக்களுக்கும், சுதேச சமஸ்தானங்கள், இலங்கை ஆகிய இடங்களுக்கும் சப்-டீலர்களாக விரும்புவோர் எழுதவும்.

# அவர் யார்?

லல்லு

‘ஆணும் பெண்ணும் சமம்!’ என்று என்னதான் கொடியாய்க் கத்தினாலும், சில துறைகளில் அதனை உண்மையாக்கிக் காண்பித்தாலும், இந்த ஓடுகிற டிராமி லிருந்து குதிக்கும் விஷயத்திலும் ஓடும் டிராமில் தொத்திக் கொள்ளும் விஷயத்தி லும் மட்டும் என்றும் ஆடவர்களுக்குச் சமமாக மாட்டோம் என்பதை அன்று அனுபவத்தில் கண்டேன்! ராயபுரம் ஆஸ்பத்திரியிலிருந்த என் சிநேகிதி ஒருத் தியைப் பார்த்துவிட்டு டிராமில் திரும்பின நான் மவுண்டு ரோடில் வண்டியை விட்டு இறங்கும் சமயத்தில் வண்டி நகர்ந்து விட்டது—அந்த ஒரு விநாடியில் என் சப்த நாடியும் ஒடுங்கி விட்டது. என்னை நான் சமாளித்துக் கொண்டு பூமியில் சரியாகக் கால் ஊன்றி நின்றதும், எனக்கு முன் வண்டியை விட்டிறங்கின ஒருவர் எனக்குக் கை கொடுத்து உதவியதை உணர்ந்தேன். அவர் அப்படிச் செய்திரா விட்டால் என் கதி என்னவாகி யிருந்திருக்கும் என்பதை இன்று நினைத்தாலும் என் உடல் நடுங்குகிறது!

படபடவென்று அடித்துக் கொண்ட நெஞ்சுடன், ‘நான் உங்களுக்கு மிகவும் கடமைப் பட்டிருக்கிறேன்; வந்தனம்!’ என்று கூறிவிட்டு விடுவிடென்று மயிலாப் பூர் செல்ல பஸ் ஸ்டாண்டுக்கு வந்து நின்று கொண்டேன். எனக்குப் பின்னால் அவரும் அங்கு வந்து சேர்ந்தார். அடையாறு செல்லும் பஸ் வந்து நின்றது. நான் ஏறினேன், அவரும் என் பின்னால் ஏறினார். எங்கள் இருவருக்கும் எதிர் எதிராக உட்கார இடம் கிடைத்தது. சற்றுப் பொறுத்து அவர், “நீங்கள் எங்கே போகி றீர்கள்?” என்றார், “மயிலாப்பூருக்கு” என்றேன். இந்தச் சமயத்தில் கண்டக்டர் வரவும் அவர் தனக்கு அடையாற்றுக்கு ஒரு டிக்கட்டும், எனக்கு ஒரு டிக்கட்டும் வாங்கினார். என்ன அதிகப் பிரசங்கித் தனம்! நான் மௌனமாகக் காசை அவரிடம் நீட்டினேன். அவர் அதை வாங்கிக்கொள்ள மறுத்துவிட்டார். அந்தப் பஸ்ஸில் அவருடன் மேலும் தர்க்கம் செய்ய இயலாதவளாய் நான் முகத்தைத் திருப்பிக் கொண்டு சும்மா யிருந்தேன்.

“நீங்கள் எந்தக் கல்லூரியில் படிக் கிறீர்கள்?” இந்தக் கேள்வியை அவர் கேட்டதும் எனக்கு வந்த சிரிப்பை அடக் கிக் கொண்டு நான், “படித்தாகிவிட்டது! மகாராணிக் கல்லூரியில் வேலையா யிருக் கிறேன்” என்றேன். அவருடைய உடை யையும், அடையாற்றுக்கு அவர் டிக்கெட் வாங்கிக் கொண்டதையும் பார்த்து அவர் ஸொஸைடியைச் சேர்ந்தவரா யிருக்கலாம் என்று நினைத்துக் கொண்டேன்.

அடுத்த ஸ்டாண்டில் பெரியவர் ஒருவர் வண்டியிலேறி அவர் பக்கத்தில் உட்கார்ந் தார். பாவம், அவர் பெண்ணுக்கோ பேத்திக்கோ வரன் தேடிக் கொண்டிருந் தார்போலும். என் ஆபத்பாந்தவனைச் சரமாரி யாகக் கேள்விகள் கேட்டு அவரைப் பற்றிய விவரங்களைத் தெரிந்து கொள்ள முயன்றார். இது எனக்கும் சௌகரியமாக இருந்தது — நானாக அவரைக் கேட்க வேண்டியதைக் கேட்காமலே நானும் தெரிந்து கொண்டேன்.

வண்டியில் அவரை உற்றுக் கவனித்த போது எனக்கு ஒரு சந்தேக முண்டாகி யிருந்தது. அதைத் தீர்த்துக் கொள்ள எண்ணி, கல்லூரியில் என் அறைக்குப் போய்ச் சேர்ந்ததும் ஓரிரண்டு மாதங் களுக்கு முன்பு எனக்குக் கிடைத்த புகைப் படத்தைத் தேடு தேடு என்று தேடினேன். அது கிடைக்கவில்லை. நான் அமைதியை இழந்தவளானேன்.

எத்தனையோ இடங்களில் எத்தனையோ வித சூரிய அஸ்தமனங்களை எத்தனையோ காவிய கர்த்தாக்களும் கதாசிரியர்களும் வர்ணித்திருக்கிறார்கள். ஆனால் எங்கள் கல்லூரியின் விசாலமான விளையாட்டு மைதானத்திலிருந்து சூரியன் அஸ்தமிக்கும்

காட்சியைக் கண்டால் அதை எந்தக் கவியாலும் கதாசிரியனாலும் வர்ணிக்க முடியாது. அந்த அழகை அங்கு நேரில் கண்டு அனுபவித்துத்தான் உணரமுடியும்.

விளையாட்டில் அடைந்த வெற்றியின் பூரிப்புடனும் களைப்புடனும் பசும்புற்றரையில் படுத்து அஸ்தமனக் காட்சியை அனுபவித்துக் கொண்டிருந்தேன். இருட்டியதும் 'ராக்கெட்'டை எடுத்து வீசிக் கொண்டு என் அறையை நோக்கி நடந்தேன். மாணவிகள் உறவினர்களுக்கு பேட்டியளிக்கும் கூடத்தைத் தாண்டிச் சென்றபோது அங்கு மாட்டப்பட்டிருக்கும் 'அறிக்கைப் பலகை'யருகில் நான் வந்ததும் சட்டென்று நின்றேன். அந்தப் பலகையில் குத்தப்பட்டிருந்த சிறு புகைப்படம் என் கவனத்தை யிழுத்தது—இல்லை, படத்துக் கடியில் கண்ட அறிக்கையே என் கவனத்தை இழுத்தது என்று சொல்ல வேண்டும். அது இதுதான்:

'இந்த மன்மதனுக் குடையவள் யாரோ அவள் படத்தை எடுத்துக் கொள்ளலாம்! நடுவழியில் இப்படியா தவிக்க விட்டு விட்டுப் போய் விடுவது? அழகுதான்!'

என்ன போக்கிரித்தனம்! விஸிடர் யாராவது இதைப் பார்த்தால் மாணவிகளைப் பற்றி எவ்வளவு கேவலமாக நினைத்துக் கொள்ள மாட்டார்? படத்தை எடுத்துக் கொண்டு அறிக்கையைக் கிழித்தெறிந்தேன். மறு நாள் தலைவியின் உத்தரவு பெற்றுப் பலகையிலிருந்த அறிக்கைகளில் முக்கியமானவற்றை ஒழுங்காகக் குத்தி வைத்து விட்டு மற்றவைகளை அப்புறப்படுத்தினேன். மாணவிகளின் ஹாஸ்ய உணர்ச்சிக்கும் குறும்புத்தனத்துக்கும் நோட்டீஸ் போர்டு இடமல்லவென்றும், அவசியமான அறிக்கை வெளியிட விரும்புவோர் என்னிடமிருந்து சாவியைப் பெற்றுக் கொள்ளலாமென்றும் ஒரு அறிக்கை எழுதி ஒட்டிவிட்டு, இத்தனை காலமும் சும்மா சாத்தி வைக்கப் பட்டிருந்த கண்ணாடிக் கதவுக்கு ஒரு பூட்டுப் போட்டு விட்டேன்.

இந்தச் சம்பவத்துக்குப் பிறகு மாணவிகளில் சில விஷமிகள் அந்தப் படத்தையும் என்னையும் சேர்த்து ஏதேதோ கதை கட்டியதை நான் கவனியாமலிருக்கவில்லை. இருந்தும் அதை நான் பொருட் படுத்தவில்லை.

சில நாட்களில் அதை மறந்தே போனேன். பஸ் பிரயாணத்தின் போதுதான் படத்தின் நினைவு எனக்கு வந்தது.

இத்தனை காலமும் யாதொரு கவலையுமில்லாமல் சுதந்திரப் பறவையாகத் திரிந்து வந்த என்னை இப்பொழுது சிந்தனை எங்கிருந்தோ வந்து சூழ்ந்து கொண்டது. நீலவானின் விளிம்பில் மேகக் கூட்டம் தோன்றினது போல நிர்மலமாக விருந்த என் உள்ளத்தில் ஏக்கம் தோன்றிப் பரவலாயிற்று. என் பூர்வ கதையை இங்கே சொல்லுகிறேன்:

என் பெயர் பத்மாவதி. இந்தக் கார்த்திகைக்கு எனக்கு வயது இருபத்திரண்டாகி விட்டது. என் தந்தை ஒரு ஏழைப் பள்ளிக்கூட உபாத்தியாயராக இருந்தார். அவருடைய வறுமைக்காக இரக்கித்தாரோ என்னமோ இரண்டு பெண் குழந்தைகளைப் பெற்ற பிறகு என்



தாயாரைக் கடவுள் அழைத்துக் கொண்டு விட்டார். என் தந்தை மறு விவாகம் செய்து கொள்ளவில்லை.

என் தமக்கைக்குத் தம் சக்திக்கும் அதிகமாகவே சீர்வரிசைகள் செய்து என் தந்தை விவாகம் செய்வித்தார். அன்றே அவள் துன்ப வாழ்க்கையும் ஆரம்பித்தது. அப்பப்பா! அவள் கணவன் வீட்டில் பட்ட சிறுமைகளும் அனுபவித்த கொடுமைகளும் கணக்கிலடங்கா. ஆனால் இரண்டு வருடங்களிலேயே அவள் பிரஸவப் படுக்கையில் இந்த நரக வாழ்விலிருந்தும் விடுதலை பெற்றுச் சென்று விட்டாள். அவளிடம் அளவற்ற அன்பு வைத்திருந்த என்னை அவளுடைய மண வாழ்க்கை பைத்தியமாக அடித்து விட்டது. புருஷர்கள் என்றால் ஏதோ ராட்சதர்களென்றும், பெண் இனத்தின் ஜன்ம சத்துருக்கள் என்றும் நிர்மானித்து விவாகமே செய்து கொள்வதில்லை என்று பிரதிக்ஞை செய்து கொண்டேன்.

என் தமக்கையின் விவாகத்தினால் குசேலராகிவிட்ட என் தந்தை அறிவுச் செல்வத்தையே எனக்கு ஸ்ரீதனமாக அளித்தார். அந்த அறிவுடன் என் பிடிவாதமும் சேர்ந்து, 'பெரியோர்கள் நிச்சயித்த வண்ணம்' நடக்கும் விவாகத்திலிருந்து என்னைத் தப்புவித்தது. எனக்காகவே உயிரைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருந்த என் தகப்பனார் நான் ஸ்கூல் பைனல் வகுப்பைத் தாண்டியதும் பிடியை நழுவ விட்டுவிட்டார். நான் தனியளானேன். நெஞ்சைப் பிளந்த துக்கத்தைச் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டு தைரியத்தைக் கைவிடாமல், உபகாரச் சம்பளம் பெற்று ஐந்து வருடங்களில் கல்லூரிப் படிப்பைப் பூர்த்தி செய்து பட்டமும் பெற்றேன். என்னிடம் அளவற்ற அனுதாபமும் நல்ல அபிப்பிராயமும் கொண்டிருந்த கல்லூரித் தலைவி என்னை அந்த ஸ்தாபனத்திலேயே வேலைக்கு அமர்த்திக் கொண்டாள்.

உற்றார் உறவினரற்ற நான் கல்லூரியிலேயே ஜாகை வைத்துக் கொண்டு சுதந்திர வாழ்வு வாழ்ந்தேன். என் தகப்பனாருக்குச் சொந்தமான வீட்டின்மேல் இருந்த கடனையெல்லாம் அடைத்து எனக்குச் சொந்தமாக்கிக் கொண்டு வீட்டை வாடகைக்கு விட்டேன்.



வேலையிலும் விளையாட்டுக்களிலும் இலக்கியங்களைச் சுவைப்பதிலுமே என் வாழ்க்கை அடங்கி விட்டது. ஆடையாபரணங்களைப் பற்றிய பேச்சிலும், உபயோகமற்ற வம்பிலும் பொழுதைப் போக்கிய என் சகாக்களைக் கண்டு உள்ளூற எனக்கு வெறுப்பாகவே இருந்தது. அறியாமையும் அசட்டுத்தனமும் நம் பெண்களுக்கு இயற்கையாகவே அமைந்து விட்டன. என்னதான் கல்வி கற்றாலும் அற்ப விஷயங்களிலுள்ள பற்று அவர்களுக்கு என்றும் விடாது. ஐய! நானும் இந்தக் கூட்டத்தில் ஒருத்தியா? என்று நான் வெட்கமடைந்தேன். இதனால் என் தோற்றத்திலும் சரி, நடவடிக்கைகளிலும் சரி, அவர்களிடமிருந்து எத்தனைக் கெத்தனை வேறுபட்டிருக்க முடியுமோ அத்தனை வித்தியாசங்களையும் வரவழைத்துக் கொண்டேன்.

ஆபரணங்கள் அணுவையச் சுமை என்று அவைகளை அகற்றினேன். யாராவது கண்ணைக் கவரும் நகையோ புடவையோ அணிந்து கொண்டால் நான் மட்டும் அதைப் பற்றி ஒன்றும் விசாரியாமல் கவனித்ததாகவே காட்டிக் கொள்ள மாட்டேன். ஏதாவது வைபவமென்று மற்றவர்கள் விசேஷமாக ஆடை அலங்காரங்கள் செய்து கொள்ளும்போது நான் மட்டும் சாதாரண உடையே தரிப்பேன். யாராவது ஆடவர் வந்தால் கோணிக்கோணித் தயங்காமல் நின்று விசாரித்து அனுப்புவேன். இப்படியெல்லாம் நடந்து கொண்டு நான் தனி வழியே நடந்ததால் வெகு சிலரே என்னிடம் நெருங்கிப் பழகி நட்புக் கொண்டனர். நான் மதித்துப் போற்றிய இருவரில் ஸ்ரீமதி காந்தாமணி ஒருவர். அவருடைய வீட்டுக்கு நான் அடிக்கடி செல்வதுண்டு.

அன்றலர்ந்த ரோஜாப்பூவை யொத்த வதன காந்தியையும், கருவண்டுகளோ வென ஐயுறத்தக்க விழிகளையும், அஜந்தா சிற்பம் உயிர்பெற்று வந்தது போன்ற உடலமைப்பையும் பெற்றிரா விட்டாலும் நான் பார்ப்பதற்குச் சுமாராக நன்றாகவே இருப்பேன்.

சாதாரணமானவர்களின் எதிர்ப்புக்கு அஞ்சாத வலிமை பெற்ற இயற்கையின் வேகத்துக்கு முன் நான் இன்று தோல்வியடைந்தேன். காரணம் கோவிந்தராஜன் தான். அவருடைய பெயரும் அத்துடன் அவர் விவாகமாகாதவர் என்பதும் அன்று பஸ்ஸில் பெரியவர் கேட்ட கேள்விகளுக்கு அவர் பதில் சொன்னதிலிருந்து தெரிந்தது. ஏனோ இது எனக்கு அளவற்ற ஆறுதலையளித்தது!

★

ஒரு நாள் தலைவி என்னைக் கூப்பிட்டனுப்பினாள். நான் சென்றேன். அகதிகளின் உதவிக்காக நிதி திரட்ட ஒரு கமிட்டி ஏற்படுத்தப்பட்டிருப்பதாயும் அந்தக் கமிட்டியார் பல கலைஞர்களின் ஒத்துழைப்பைக் கொண்டு ஒரு கதம்ப நிகழ்ச்சி நடத்த ஏற்பாடுகள் செய்து வருவதாயும், எங்கள் கல்லூரியும் ஒரு நடன நிகழ்ச்சியும் ஆர்கெஸ்ட்ராவும் தரவேண்டுமென்று அவர்கள் கேட்டுக் கொண்டதாகவும் தெரிவித்துவிட்டுக் கல்லூரியின் சார்பாக பொறுப்பை நான் ஏற்றுக் கொள்ள முடியுமா என்று கேட்டார். இந்த மாதிரிக் காரியமென்றால் நான் குதித்துக் கொண்டு புறப்படுவேன் என்று அவருக்குத் தெரியும்!




மறுநாள் மாலை நாலு மணி சுமாருக்கு வகுப்பு முடியும் தறுவாயில் பியூன் என்னிடம் ஒரு துண்டுக் காகிதத்தைக் கொடுத்தான். கமிட்டியைச் சேர்ந்த ஒருவர் ஆலோசனைக்கு வந்திருப்பதாகவும், உடனே நான் தன் அறைக்கு வரவேண்டுமென்றும் தலைவி எழுதியிருந்தாள்.

அறைக்குள் காலெடுத்து வைத்த நான் திகைத்து நின்றேன். தலைவிக்கு எதிரில் கதவுக்கு முதுகுப்புறமாக உட்கார்ந்திருந்த அவர் வேறு யாருமில்லை; அவரேதான்; அவரை எனக்கு ஏற்கெனவே தெரியும் என்பதைக் காண்பித்துக் கொள்வதா, வேண்டாமா,

அவர் காண்பித்துக் கொள்வாரா, மாட்டாரா என்ற சந்தேகம் என்னைக் குழப்பியது. அவராகப் பிரஸ்தாபித்தாலொழிய நாமாக ஒன்றும் சொல்ல வேண்டாம் என்ற தீர்மானத்துடன் உள்ளே நுழைந்தேன்.

தலைவி எங்களை ஒருவருக் கொருவர் அறிமுகம் செய்வித்தார். நல்ல வேளை, அவர் ஒன்றும் வாயைத் திறக்கவில்லை. அமைதியும் அறிவும் நிறைந்த அவர் கண்களில் மட்டும் குறும்புத்தனம் கூத்தாடிற்று! உதடுகளில் சிரிப்பு வெடித்துக் கொண்டிருந்தது! கைகளைக் கூப்பி என்னை நமஸ்கரித்தார். நானும் வந்தனம் செலுத்தினேன்.

எங்கள் கல்லூரியின் சார்பாக நான் ஏற்றுக்கொள்ள வேண்டிய வேலைகளை விவரித்தானதும் அவர் தலைவியிடம் விடைபெற்றுக் கொண்டு என்னுடன் வெளியே வந்தார். ஏதோ கனவு லோகத்தில் சஞ்சரிப்பவள்போல அவருடன் என் அறையை நோக்கி நடந்தேன். வழியில் எதிர்ப்பட்ட ஸ்ரீமதி காந்தாமணி எங்களைக் கண்டதும் ஆச்சரியத்துடன், 'அட, நீங்கள் இங்கு எங்கு வந்தீர்கள்?' என்று கேட்டார். நான் விஷயத்தைச் சொன்னேன். மூவரும் என் அறைக்குச் சென்று தேனீர் அருந்தினோம்.

உதவி நிதிக்காக ஏற்படுத்திய நிகழ்ச்சி நடைபெற வேண்டிய தேதியும் வந்தது. பன்மடங்கு அதிகமான உற்சாகத்துடன் டிக்கெட்டு விற்பதிலும் நிகழ்ச்சியில் கலந்துகொண்ட மாணவிகளுக்கு ஊக்க மூட்டுவதிலும் நான் ஈடுபட்டேன் என்று சொல்லத் தேவையில்லை. நிகழ்ச்சி பிரமாதமாக இருந்தது. நிதிவரவும் அதைவிடப் பிரமாதமாக இருந்தது.

இதற்குப் பிறகு என்னைக் காண அவர் மாதம் ஒரு முறையாவது கல்லூரிக்கு வருவது சகஜமாகிவிட்டது. சில சமயம் ஸ்ரீமதி காந்தாமணியின் வீட்டிலும் - அகஸ்மாத்தாகத்தானோ, என்னமோ - நாங்கள் சந்திக்க நேர்ந்தது. ஒரு கற்பனையுலகைச் சிருஷ்டித்துக் கொண்டு நான் தனியே அதில் சஞ்சரிக்கலானேன். அவரிடம் நானாக எப்படி என் விருப்பத்தைத் தெரிவிப்பது?

அன்று வழக்கத்துக்கு அதிகமாகவே என் மனம் சோர்வடைந்திருந்தது. விடுமுறை யானதால் நான் முழுதும் படுக்கையிலேயே விழுந்து கிடந்த நான் சாயந்திரமானதும் பரட்டைத் தலையும் கசங்கின புடவையுமாய்த் தோட்டத்தில் உலாவிவரச் சென்றேன். சிறிது நேரத்திற் கெல்லாம் வேலைக்காரப் பெண் வந்து, 'அம்மா, அறையிலே யாரோ ஐயரு வந்திருக்காரு' என்று சொன்னாள். அப்போது தான் அறைக் கதவை திறந்து போட்டுவிட்டு வந்த ஞாபகம் வந்தது. ஒருவேளை அவராக இருக்கலாமோ என்ற சபலத்துடன் நான் முன்னால் ஓடினேன்.

அவர் என்னுடைய புத்தக அலமாரிக் கடியில் நின்றுகொண்டு ஏதோ ஒரு புத்தகத்தைப் புரட்டிக் கொண்டிருந்தார். நான் உள்ளே வந்ததைக் கூட உணராமல் அதில் ஈடுபட்டிருந்த அவர் நான் நாற்காலியொன்றை இழுத்ததும் சட்டென்று திரும்பினார். உடனே பட்டென்று புத்தகத்தை மூடிக்கொண்டு நாற்காலியில் வந்து உட்கார்ந்தார். புத்தகங்களைப்பற்றிப் பொதுவாகக் கொஞ்ச நேரம் பேசினோம். அவர் ஏனோ என்னை விசித்திரமாகப் பார்த்துக் கொண்டே யிருந்தது எனக்கு வேதனையாக இருக்கவே நான் ஜன்னல் பக்கம் முகத்தைத் திருப்பிக் கொண்டேன். அடுத்த நிமிஷம் என் மடியில் ஏதோ லேசான வஸ்து விழுந்ததை யுணர்ந்து திரும்பினேன்.

அத்தனை நாளும் நான் தேடித் தேடிக் காணாமல் தவித்த அந்தப் படம் என் மடிமேல் கிடந்தது. நான் தொட்டுக்கூடப் பார்க்காத அந்தப் புத்தகத்தில் அது பதுங்கி யிருந்திருக்க வேண்டும்.

“இது உங்களுக்கு ஏது?” என்றார். அது என்னிடம் வந்து சேர்ந்த விருத்தாந்தத்தைக் கூறினேன். அதைக் கேட்டுவிட்டு அவர் கண்ணை இமைக்காமல் என்னைப் பார்த்துக் கொண்டே, “கோட்டையில் என்ன சொல்லியிருந்ததோ அதைத் தான் செய்தீர்கள்!” என்றார்.

“என்ன?” என்று கத்தினேன் — என்னையும் மீறி.

“ஆம்; இந்த மன்மதனுக் குடையவள் நீதான்! பத்மா, சோக்கம் சோக்கம் என்று என் சும்மா துக்கம் போட்டுக் கொண்டு உணர்ச்சியைக் கொன்று உன் வாழ்வை நீயே குலைத்துக் கொள்கிறாய்? அன்பு செய்யக் கணவனும் குழந்தைகளுமில்லாமல் உன் வாழ்க்கை என்றும் பூரணத்துவம் அடையாது! அன்றே நமக்கு

பாணிக்கிரஹணம் நடந்து விட்டது. ஊரா ருக்காக இன்னொரு தரம் செய்து கொள்ள வேண்டியதுதான் பாக்கி!'' என்று கூறிக் கொண்டே எழுந்து, இரவிலும் பகலிலும் என்னைப் பைத்தியமாக்கிய அந்தக் குறும்புச் சிரிப்புடன் என் அருகில் வந்தார்.

என் கைகள் அவருடைய பிடியில் சிக்கிக் கிடந்தபோது நான் அவரை, "இந்தப் படம் கல்லூரிக்கு எப்படி வந் திருக்கும்?'' என்று கேட்டேன்.

அவருக்கு ஒரு தங்கை இருப்பதாகவும், வருட ஆரம்பத்தில் அவள் கல்லூரியில் சேர்ந்து ஓரிரண்டு மாதங்கள் படித்து விட்டு நின்று விட்டதாகவும், கணவனுடன் அவள் அடையாறு ஸொஸைடியில் வசிக் கிறாளென்றும் கூறினார். படத்தை அவள் நழுவ விட்டிருக்கவேண்டும் என்றார்.

★

சொந்த வீட்டைப் பழுது பார்த்து வெள்ளையடித்துக் குடித்தனம் வைக்கச் சௌகரியமாக்கிக் கொண்டேன். போகிப் பண்டிகையன்றே கல்லூரியிலிருந்து என் சாமான்களை எடுத்துக் கொண்டு வந்து சேர்ந்தேன்.

அன்று பொங்கல் பண்டிகை.

என்றுமில்லாத் திருநாளாய் அன்று பளிச்சென்று மஞ்சள் பூசிக் குளித்து, அவ ருக்கு மிகவும் பிடித்தமான நிர்மலமான ஆகாச நீல நிறத்தில் ஒரு புடவையைக் கட்டிக் கொண்டேன். கல்யாணத்துக்காக வாங்கிவைத்த ஆபரணங்களை அணிந்து கொண்டேன்.

இந்த அலங்காரங்கள் ஆடவனுடைய கண்களுக்குக் குளிர்ச்சியைத் தருபவை என்ற மகத்தான உண்மையை அப்போது கண்டு பிடித்திருந்தேன்! இந்த உண் மையை ஆடவர்கள் உணரவில்லையோ என்னமோ! அவர்கள் மட்டும் பெண் களுக்கு நகையிலும் நட்டிலும், பட்டிலும் புடவையிலும் இருக்கும் பிரேமையைப் பரிகசித்தவண்ணமிருக்கிறார்கள்!

அன்றுதான் முதல் தடவையாக நான் பக்தியும் சிரத்தையும் கலந்த குதூகலத் துடன் பண்டிகையைக் கொண்டாடும் ஏற்பாடுகளை மற்றப் பெண்களைப் போலவே செய்தேன்.

திருவைப்போல, மஞ்சள் பூச்சுடனும் குங்கும திலகத்துடனும் மலர் மாலை மஞ்சள் கொத்துடனும் பிரகாசித்த பொங் கற் பானையில் பொங்கல் பொங்கு பொங் கென்று பொங்கிக் கொண்டிருந்தது. என் உள்ளத்திலே உவகை பொங்கிக் கொண்டிருந்தது! அந்தத் தை மாதம் ஐந்தாந் தேதி ஞாயிற்றுக்கிழமை, சுபயோக சுப முகூர்த்தத்தில் எனக்கு விவாகம் நடைபெற விருந்தது.

பொங்கல் விருந்துக்கு எங்கள் கல்லூரி யின் ஆங்கில ஆசிரியையான ஸ்ரீமதி காந்தா மணியையும், என் நாத்தனாரையும் அவள் அகமுடையானையும் அழைத்திருந்தோம். எல்லாரும் வந்த பிறகு கடைசியாக அவர் ஒரு கையில் கரும்புடனும் இன்னொரு கையில் புஸ்தகத்துடனும் உள்ளே நுழைந் தார். அப்போது காந்தாமணி "பத்மா! மன்மதன் வந்துவிட்டார்; இனிமேல் பூஜையை ஆரம்பிக்கலாம்!'' என்று கத்தி அடுப்படியில் வேலையாக இருந்த என்னை வெளியே வரச் செய்தார்.

அன்றுவரை மானஸீகமாக எனக்கு மட்டும் மன்மதனாயிருந்த கோவிந்தராஜன் அன்று மன்மத வேஷத்தில் எல்லாருக்கும் காட்சியளித்துக் கொண்டு நின்றார்!

# 'ஸ்திரீகள் மட்டும்'

எம். ஆர். ராஜகோபாலன்

புருஷோத்தம அய்யர் ஆபீஸிலிருந்து வந்ததும் கோட்டைக் கழற்றி விட்டுச் சாய்வு நாற்காலியில் உட்கார்ந்தார். அப்போது அவருடைய சகதர்மிணி ஒரு டம்ளரில் காப்பி கொண்டு வந்தாள். அந்தக் காப்பியைக் கொஞ்சம் கொஞ்சமாக ரஸித்துச் சாப்பிட ஆரம்பித்தார்.

"ஏன்னா, உங்களைத்தானே, ரெண்டு நாளாக உங்க கிட்டே ஒரு சமாசாரம் சொல்லணும் சொல்லணும்னு இருந்தேன். இன்னிக்கித்தான் அதுக்கு வேளை வந்தது!" என்று சொல்லிக் கொண்டே அவர் மனைவி காமாக்ஷி அவர் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டாள்.

"அப்பேர்ப்பட்ட சமாசாரம் என்னவோ? உனக்குத்தான் ஆயிரம் சமாசாரம் அடுக்கடுக்காய் இருக்குமே! என்ன, பக்கத்து வீட்டு எருமை மாடு கன்னுகின்னு போட்டிருக்கோ?" என்றார் புருஷோத்தம அய்யர்.

"ஆமாம், உங்களுக்கு எப்போதுமே வேடிக்கைதான். தை பிறந்துவிட்டது, நம்ம ராகவனுக்கு ஏதாவது ஒரு வரனை அவசியம் நிச்சயம் பண்ணியாகணும்னு தான் சொல்ல வந்தேன்."

"இதென்ன உலகத்திலே இல்லாத எட்டாவது அதிசயமாக அல்லவா இருக்கிறது! பெண்ணைப் பெற்றவள்தான் இப்படிச் சொல்லி நான் பார்த்ததுண்டு. பிள்ளையைப் பெற்றவள், அதுவும் ஒரே பிள்ளையை, இப்படிச் சொல்லுவதை என்னால் நம்ப முடியவில்லையே! எங்க அம்மாகூடப் பேரனுக்குக் கலியாணமாகிக் கண்ணாலே பார்த்துட்டுதான் உயிரை விடுவேன்னு பிடிவாதம் பிடிக்கல்லியே! ஒருவேளை உங்க அம்மாவுக்கு அப்படி ஏதாவது உத்தேசம் உண்டோ!"

"அதெல்லாம் ஒண்ணுமில்லை. நான் ஒரு காரணமாகத் தான் சொல்றேன்" என்றாள் காமாக்ஷி.

"தெரிஞ்சு போச்சு உன் காரணம். வரதக்ஷிணைக் கட்டுப்பாடு சட்டமாவதற்கு முன்னே நாலாயிரமோ ஐயாயிரமோ வாங்கி வட்டிக்குப் போட்டுடலாம் என்பது தானே உன் உத்தேசம்? அடேயப்பா! பலே கைக்காரிதான் நீ!" என்றார் புருஷோத்தம அய்யர்.

"அப்படி ஒண்ணும் நான் பேராசை பிடித்துக் கிடந்து அலையவில்லை. நீங்க குஷாலாய் உங்க பிள்ளைக்கு ரெண்டாயிரந்தான் வாங்குங்கோ, இல்லாட்டா வாங்காமயேதான் பண்ணுங்கோ, அதைப் பற்றி எனக்குக் கவலையில்லை. இது வேறே விஷயம்."

"அதைத்தான் என்னவென்று சொல்லேன் பார்க்கலாம்!"

"இரண்டு நாள் முன்னாடி அடுப்புப் பற்ற வைப்பதற்காக ஏதாவது பழைய காகிதம் கிடைக்குமா என்று ராகவனுடைய புத்தக அலமாரிக்குப் பக்கத்தில் தேடினேன். அப்போது அவன் எழுதியிருந்த ஏதோ ஒரு காகிதம் என் கண்ணிலே பட்டது. யாரோ ஒருத்தியை இவன் தாம்பரம் காலேஜுக்குப் போக ஆரம்பித்ததிலிருந்து தினம் ரயிலிலே பார்த்துக் கொண்டு வருகிறானும். அவளைப் பற்றி என்னவெல்லாமோ வருணித்து அதிலே எழுதியிருக்கிறான். அவள் யாரோ, எவளோ! காலம் கெட்டுக் கிடக்கிறது. அப்புறம் ஏதாவது ஒண்ணுக் கொண்ணு ஏற்பட்டுவிட்டால் வம்பாய்ப் போய்முடியும். இதை இப்படியே விட்டுவிடக் கூடாது. நம்ப பையன் வீணாகப் போய் விடுவான். அதுக்குத்தான் ஏதாவது ஒரு கால்கட்டைச் சீக்கிரம் கட்டிப் போட்டுடணும்னு சொல்ல வந்தேன். இதோ பாருங்கோ அந்தக் கடிதாசு" என்று புருஷோத்தம அய்யரிடம் ஒரு காகிதத்தைக் கொடுத்தாள் காமாக்ஷி.

புருஷோத்தம அய்யர் அதை வாங்கித் தம் வெள்ளெழுத்துக் கண்ணாடியைச் சரிப்படுத்திப் போட்டுக் கொண்டு படிக்க ஆரம்பித்தார். அதில் பின்வருமாறு எழுதியிருந்தது:

"சென்ற இரண்டு வருஷங்களாக நான் தாம்பரம் காலேஜுக்குப் போகும் போது ஒரு நாளாவது ரயிலில் அவளைப் பார்க்கத் தவறியதே இல்லை. அப்படிக் காலேஜுக்குப் போகும் அவசரத்தில் காலையில் பார்க்கா விட்டாலும், மாலையில் அவசியம் அவள் என் கண்களில் பட்டே தீருவாள். எப்பொழுதும் புன்னகை தவழும் முகம். வாடாத மேனி, அவள் தலையில் வதங்காத புஷ்பம். நேற்றைப் போலவே இன்றைக்கும் அப்பழுக்கு இல்லாத உடை, மாலை வேளையில் அவளைச் சுற்றி அலாதியான ஒரு பிரகாசம் இருந்து கொண்டே இருக்கும்.

"என் நண்பர்கள் கூடச் சிலசமயம் என்னுடன் சேர்ந்து அவள் அழகைப் பார்த்து அனுபவிப்பது உண்டு. மூன்று மாதத்திற்கு முன்னால் என் பாட்டியை ஊருக்கு அனுப்ப எழும்பூர் ஸ்டேஷனுக்குப் போயிருந்தேன். அங்கும் அவள் இருந்தாள். அலங்காரம் மட்டும் கொஞ்சம் மாறி இருந்தது. அன்று ஒரே கூட்டம். இடமே கிடைக்கவில்லை. பாட்டிக்கு அவள் இருந்த இடத்தில்தான் கொஞ்சம் இடம் கிடைத்தது. இந்தக் காலத்துப் பெண்களைக் கண்டாலே என் பாட்டிக்குப் பிடிக்காது. 'தடிக் சட்டைகள் மாதிரி நாலுபேருக்கு நடுவில் வந்து நிற்கிறதுகள்' என்று கண்டிப்பாள். அப்பேர்ப்பட்ட பாட்டி அவளைப் பார்த்தவுடன் 'இந்தப் பெண்தான் எவ்வளவு அழகா யிருக்காடா, இன்னிக்கெல்லாம் பார்த்துக் கொண்டிருக்கலாம் போலே இருக்கே' என்றாள்"

இவ்வளவுதான் அதில் எழுதி யிருந்தது. படித்து முடித்ததும் புருஷோத்தம அய்யர் தன் வழுக்கைத் தலையை ஒரு முறை தடவி விட்டுக் கொண்டார்.

பிறகு "பயல் இவ்வளவு தூரத்துக்குப் போய்விட்டானா? சரி, உன்னிஷ்டப்படியே ஒரு குட்டியைப் பார்த்துக் கட்டிப் போட்டுவிட வேண்டியதுதான். அப்புறம் மனசை இந்த வழியிலெல்லாம் செலுத்த மாட்டான்" என்று தம் சம்மதத்தை வெளியிட்டார்.

## 2

அன்று ராகவன் எதையோ விழுந்து விழுந்து தேடிக் கொண்டிருந்தான். சந்து பொந்து, குப்பைக் கூடை எல்லாவற்றையும் அலசி அலசிப் பார்த்தது தான் மிச்சம். அவன் தேடினது கிடைக்கவே யில்லை. இதனால் அவனுக்குச் சாப்பாடுகூடச் சரியாக இறங்கவில்லை.

இதைக் காமாக்ஷியம்மாள் கவனித்துக் கொண்டாள். குட்டை உடைப்பதற்கு இப்படிப்பட்ட சந்தர்ப்பம் எப்பொழுது வாய்க்குமென்றுதான் அவள் காத்துக் கொண்டிருந்தாள்.

"ஏண்டா இன்னிக்குச் சாப்பிடவே யில்லை? தினம் ரயிலிலே பார்க்கிற அந்தப் பெண்ணுடைய தரிசனம் இன்றைக்குக் கிடைக்காமற் போய் விட்டதோ?" என்றாள் குத்தலாக.

ராகவன் இதைக் கேட்டானோ இல்லையோ, ஒரு துள்ளுத் துள்ளிக் குதித்தான்.

"உனக்கு எப்படியம்மா இது தெரியும்? நான் எழுதி வைத்திருந்த காகிதத்தை எங்கேயாவது பார்த்தாயா? அதைத்தான் இத்தனை நாழியாகத் தேடிக் கொண்டிருந்தேன்!" என்றான்.

"நன்றாய்ப் பார்த்தேன். உங்கப்பாவிடமும் பார்க்கக் கொடுத்திருக்கேன்" என்றாள் காமாக்ஷி.

"இதைப்போய் அப்பாவினிடம் ஏன் கொடுத்தாய், அம்மா?"

"உனக்கு இந்தமாதிரி யெல்லாம் பழக்கம் ஏற்பட்டிருக்கிறதென்று அவருக்குத் தெரியத்தான். தெரிந்து கொண்டு உன்னை நல்ல வழியிலே திருப்பத்தான்."

இதைக் கேட்டதும் ராகவனுக்குச் சிரிப்புத் தாங்கவில்லை.

"ஐயோ அம்மா, இதைப் போயா இவ்வளவு பிரமாதப் படுத்திவிட்டாய்? காலேஜ் பத்திரிகைக்கு உபாத்தியாயர் வேடிக்கையாக ஒரு கதை எழுதித் தரச் சொல்லிக் கேட்டிருந்தார். அதிலே ஒரு பக்கம்தான் நீ அப்பாகிட்டே கொடுத்திருக்கிறது. இன்னொரு பக்கம் இதோ இருக்கிறது. படிக்கிறேன் கேள்" என்று படிக்க ஆரம்பித்தான்; இதற்குள் புருஷோத்தம அய்யரும் அங்கு வந்துவிட்டார்.

"அன்றொரு நாள் ரயில்வே தொழிலாளிகள் வேலை நிறுத்தம் செய்திருக்கிறார்களென்று ஊரெல்லாம் அமர்க்களப் பட்டது. ரயில்வேக்காரர்கள் மட்டும் பிடிவாதமாக இரண்டொரு ரயிலை ஓட்டினார்கள். வேலைநிறுத்தக்காரர்கள் அவற்றின்மேல் கல்லை விட்டெறிந்து கலாட்டா பண்ணுவதாகக் கேள்விப்பட்டேன். 'பாவம்! வழக்கமாக வரும் அந்தப் பெண் கல்லடி படாமல் வரவேண்டுமே. ஒரு கல் பட்டாலும் அவள் மேனி உருக்குலைந்து போகுமே' என்று கவலைப்பட்டேன். ரயில் வந்தது. நான் நினைத்தபடியே நடந்து விட்டது. வழக்கமாக அவள் இருக்குமிடம் போய்ப் பார்த்தேன். அவளைக் காணவில்லை. 'ஸ்திரீகள் மட்டும்' என்று பெரிய எழுத்துக்கள் இருந்தனவே தவிர அவள் அப்படியே தூள் தூளாக நொறுங்கிக் கிடந்தாள். அவள் யாரோ சொல்லுங்கள் பார்க்கலாம்" என்று கதையைப் படித்து முடித்தான் ராகவன்.

"அட போக்கிரி, ரயிலில் பெண்கள் பெட்டியில் வரும் அந்தப் படத்தைப் பற்றியா இவ்வளவு வர்ணனை?" என்று சொல்லி புருஷோத்தம அய்யர் ஆச்சரியமும், சந்தோஷமும் பெருக ராகவன் முதுகில் ஒரு 'ஷொட்டு'க் கொடுத்தார்.

காமாக்ஷியம்மாளும் "அவ்வளவும் கதையா? நான் வேறு என்னமோ என்று நினைத்துக் கொண்டு அல்லவா வேதனைப் பட்டேன்!" என்றாள்.





மதுரைமாநகரில் ஜனவரி 1ல ஆரம்பமான தமிழ்த் திருநாளுக்காகப் பிரதம மந்திரி டாக்டர் சுப்பராயன் முதலியவர்கள் ரயிலில் வந்து இறங்கினார்கள். வரவேற்பு சபைத் தலைவர் ஸ்ரீ பி. டி. ராஜன் மலர்ந்த முகத்துடன் அவர்களை வரவேற்றார்

●

ஸ்ரீ ட்ரோஜன் அண்ணாமலைச் செட்டியார், ஸ்ரீ எஸ். ராமசாமி நாயுடு, ஸ்ரீ சுப்பி முதலி, தமிழ் அன்பர்களும் அதே ரயிலில் வந்து இறங்கினார்கள்

# மதுரையில் தமிழ்த் திருநாள்







போட்டோ: ஆர். என். நாகராஜ ராவ்.




அதிகாலையில் மதுரை நகரின் விசாலமான வீதிகளில் யானைமீது தமிழ்ச் சுவடிகளை வைத்து ஊர்வலம் நடத்தினார்கள். இங்கே, ஊர்வலம் தயாராகும் காட்சியைப் பார்க்கலாம். (அட்டைப் படத்தில் ஊர்வலக் காட்சியைக் காணலாம்.)



கோவை ஸ்ரீ ரத்தின சபாபதி முதலியார், டாக்டர் சுப்பராயன், ஸ்ரீ ஆர். கே. சண்முகம் செட்டியார், ஸ்ரீ டி. ஆர். சீனிவாசன், ஸ்ரீ வடபாதி மங்களம் தியாகராஜ முதலியார் ஆகியோரும் மற்றும் ஆயிரக்கணக்கான மக்களும் நெருக்கி அடித்து உட்கார்ந்திருக்க கல்யாண மண்டபத்தில்...

டாக்டர் ராஜன் தமிழ்ப் புத்தகக் கண்காட்சியைத் திறந்து வைத்தார். இருப்புக் கம்பிகள் மீது ஜனங்கள் ஏறி நிற்பதைக் கவனியுங்கள்.



* *

அழகாக அலங்கரித்திருந்த மதுரைக் கோயில் புது மண்டபத்தில் பிரதம மந்திரி கனம் ரெட்டியார் அவர்கள் தமிழ்த் திருநாள் வைபவத்தை ஆரம்பித்து வைத்தார்.

* *



* *

இந்திய சுதந்திர சர்க்காரின் நிதி மந்திரி ஸ்ரீ ஆர். கே. ஷண்முகம் செட்டியார் அவர்கள் திருநாளுக்குத் தலைமை வகித்து நடத்தி வைத்தார்.

* *



* *

மாலையில் நடந்த பொதுக் கூட்டத்துக்குக் கனம் பக்தவத்ஸலம் தலைமை வகித்துத் தமிழ் முன்னேற்றத்தைக் குறித்து அழகிய சொற்பொழிவு நிகழ்த்தினார்.

* *



இரண்டு நிலங்களிலும் புது மண்டபத்தில் எள்ளுப் போட்டால் எள்ளு விழாதபடி தமிழன்பர்களின் கூட்டம் நிறைந்திருந்தது.



இரண்டாம் நாள் மாலை விழாவின் முக்கிய நிகழ்ச்சியாகிய பரிசு அளிக்கும் வைபவம் நடைபெற்றது. கல்வி மந்திரி கனம் டி. எஸ். அவிநாசிலிங்கம் பரிசு பெற்ற அறுவரில் ஒருவரான கேப்டன் சேஷாத்ரி நாதன் அவர்களுக்கு அழகிய அச்சிட்டப் பத்திரத்தோடு ரூ. 500 செக்கும் அளிக்கும் காட்சியை இப் படத்தில் காணலாம். ஒலிபெருக்கிகளின் அருகில் நிற்பவர்





தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் காரியதரிசி ஸ்ரீ. ம. பெ. பெரியசாமித்தூரன்.

கல்வி ஆசிரியர் கடைசியாக வரவேற்புக் கழகத்தாருக்கு நகைச்சுவை ததும்ப நன்றி கூறிய போது சபையில் அனைவருடைய முகமும் அகமும் மலர்ந்திருந்தன.

"அவர்கள் தேனீரை விரும்பிய போதிலும் நல்ல டீ என்ன வென்பது அவர்களுக்குத் தெரியாது. எப்படித்தெரியும்? அவர்கள் பாலை பாண்டத்திலேயே



கலந்து, கோப்பையில் ஊற்றுமுன் பாகலை கெடுத்துவிடுகின்றனர். நல்ல டீ தயாரிக்க, பாலை பாண்டத்தில் கலக்கக்கூடாது; கோப்பையிலேயே சேர்த்துக்கொள்ள வேண்டும்."



கோடிக்கணக்கான மக்கள் சோர்வு நீங்கி புத்துணர்ச்சி பெறுவதற்கு டீ அருந்துகிறார்கள். ஆனால் டீ அருந்தும் பலருக்கு நல்ல டீ என்ன வென்பது தெரியாமலிருப்பது வருந்தத்தக்கவிஷயம். நல்ல டீ தயாரிக்க எவ்வித அதிகச்செலவும் கிடையாது. ஐந்து சுலபமான விதிகளைப் பின்பற்றினால் போதும். உங்கள் பணத்துக்கு முழு மதிப்பு பெறவும், தேயிலைபானம் நறுமணம் ததும்பியிருக்கவும், இவ்விதிகளை உங்கள் மனதில் பதிய வைத்து, எப்போதும் வீட்டில் இவ்விதிகளைப் பின்பற்றச் செய்வது அவசியம்.

**ஐந்து சுலபமான விதிகள்**




இந்தியன் டீ மார்க்கெட் எக்ஸ்பான்ஷன் போர்டாரால் வெளியிடப்பட்டது.



# நினைவின் நிழல்கள்

க. கணபதி.

மணி ஏழு அடித்தது. வெள்ளை யூனிபாரம் அணிந்த பெண்ணுருவங்கள் நர்ஸ் விடுதியிலிருந்து அன்னமென நடந்து அணிவகுத்துப் புறப்பட்டன, காலை 'ட்யூட்டி' பார்ப்பதற்காக. அவர்களுடைய கவலையற்ற பேச்சும் குதூகலச் சிரிப்பும், கலகல வென்று எங்கும் எதிரொலித்தது. கடைசியில் வந்த கமலினி மட்டும் எதிலும் கலந்து கொள்ளவில்லை. அவள் நடையில் மிடுக்கு இல்லை; உள்ளத்தில் உற்சாக மில்லை. அவள் அழகிய முகம் சோகத்தில் தோய்ந்து ஒளியிழந்து கிடந்தது. அவள் அகன்ற விழிகளில் துயரம் பிரதிபலித்தது. தளர் நடை நடந்து ஆஸ்பத்திரிக்குள் நுழைந்து அன்றைய கடனைத் தீர்க்க முனைந்தாள்.

மருந்துகளின் வாசனை, வேதனையில் வெடித்த முனகல்கள், மற்ற நர்சுகளின் ஓயாத பேச்சு, சிரிப்பு — எதுவும் அவள் காதில் ஏறவில்லை; கருத்தில் பதியவில்லை. அவள் மனம் எங்கேயோ அலைந்து தத்தளித்தது. யந்திரத்தைப் போல் அந்த வார்டிலுள்ள ஒவ்வொரு கட்டிலுக்கும் போனாள். ரிகார்டுகளைப் பார்த்தாள். தர்மாமீட்டரை எடுத்து ஜுர அளவுகளைப் பதிவு செய்தாள்.— இன்று நேற்றல்ல, கடந்த ஐந்து வருஷ காலமாக தினமும் இதே கதைதான்!

ஐந்து வருஷத்திற்கு முன்பு,-அப்போது அவள் பத்தாவது படித்து முடித்த சமயம். அவளும் அவளது விதவைத் தாயாருந்தான்; வேறு யாருமில்லை. பெண்கள் படித்துவிட்டால் உடனே உத்தியோகமும் பார்க்கவேண்டும் என்ற கோஷ்டியைக் கமலினி சேர்ந்தவளல்ல. தன் கருத்துக்கினிய கணவனைக் கல்யாணம் செய்து கொண்டு குடும்பம் நடத்தி இன்பம் பெறவே அவள் பேதையுள்ளம் விரும்பியது. அவள் விருப்பமே உருவாக, அவள் வாழ்க்கையில் ராகவன் எம். ஏ. நுழைந்தான். அகஸ்மாத்தாக ஏற்பட்ட நட்புதான்; வேர் விட்டு வளர்ந்து காதலாக மலர்ந்தது. அவளும் அதற்குள் கற்பனைக் கோட்டைகள் ஆயிரம் ஆயிரமாகக் கட்டிக் கொண்டிருந்தாள். எல்லாவற்றையும் இடித்துத் தகர்த்து விட்டுத் திடீரென்று ஒருநாள், அவன் மாயமாக மறைந்து விட்டான். என்ன விசாரித்தும் நாளது வரையில் அவனைப் பற்றிய தகவலே கிடைக்கவில்லை. எனினும் அவளுக்கு அவனிடமிருந்த நம்பிக்கை மட்டும் தளரவில்லை. அந்த நம்பிக்கையே அவளை உயிர் வாழச் செய்தது. அந்த நம்பிக்கையே, இதற்கிடையே எத்தனையோ வரன்கள் வந்துங்கூட, அவர்கள் யாரையுமே ஏற்றுக் கொள்ளாமல், தனியாக வாழத் தைரியமளித்தது. நர்ஸிங் வேலை அவள் உடலுக்கும் மனசுக்கும் போதிய உழைப்பு கொடுத்தது மல்லாமல் தன் தாயாரின் பராமரிப்புக்கும் தாராளமாக உதவியது. ஐந்து வருடம் ஓடினதே தெரியவில்லை. அவளுடைய மனமொடிந்த தாயாரும், அவளை நிராதரவாக விட்டுவிட்டுக் கண்ணை மூடிவிட்டாள். அதற்காக ஒருமாத காலம் லீவிலிருந்துவிட்டு இன்றுதான் வேலைக்குத் திரும்பினாள், கமலினி.

மீண்டும் அதே வேலை! வியாதியஸ்தர்கள்...முனகல்கள்... இவ்வளவும் எதற்காக? யாருக்காக? சேவை யுணர்ச்சி, ஓர் அளவுக்கு வேண்டியதுதான். ஆனால் அதுவே போதுமா? வாழ்க்கையில்,— ஆணுக்கும் சரி பெண்ணுக்கும் சரி,— ஒரு பிடிப்பு அவசியமில்லையா? இத்தனை நாளும் அவள் உயிர் வாழ்ந்தது ஓர் அளவிற்குத் தாயாரின் பராமரிப்புக்காக. இனி, அவள் யாருக்காக வாழ வேண்டும்? என்ன தான் இங்கே உழைத்தாலும், கேவலம் பணத்திற்காகத்தானே! தனக்

கென ஒரு வீடு. அதில் தன் ஆசைக் கணவன். இன்முகக் குழந்தைகள்...... அதில் கிடைக்கும் ஆனந்தம்.........!

சிந்தனைகளுக் கிடையே வேலை பாட்டுக்கு நடந்து கொண்டிருந்தது. பத்து கட்டில்களைப் பார்த்து விட்டாள். பதினோராம் கட்டிலுக்கு வந்தாள். ரிகார்டைப் பார்த்தாள். ரஸாயனப் பரிசோதனை செய்யும்போது முகத்தில் திராவகம் பட்டுப் புண்ணான கேஸ். அகஸ்மாத்தாகப் பெயரைக் கவனித்தாள்.—"புரொபஸர் ராகவன்!" அவள் இருதயம் 'பக்' கென்று நின்றது; கண்கள் மறைத்தன; கால்கள் தள்ளாடின. சட்டென்று பக்க வாட்டிலிருந்த சுவரில் சாய்ந்துகொண்டு, நிதானமாகக் கட்டிலில் கிடந்த வியாதியஸ்தனைக் கவனித்தாள். சுவாசிப்பதற்குக் கொஞ்சம் இடைவெளியும் வாயையும் தவிர, முகம் முழுவதும் ஒரே 'பாண்டேஜ்' மயம். மேலும் கீழும் பார்த்தாள்; பார்த்துக்கொண்டேயிருந்தாள். சந்தேகமே இல்லை: அதே கம்பீரமான உருவம். அன்பும் ஆர்வமும் தவழத் தன்னுடன் கொஞ்சி உறவாடிய அதே உதடுகள். அவள் கண்கள் கலங்கின. இன்னது செய்வதென்று தெரியவில்லை......புரொபஸர் ராகவன்! அப்படியானால் அவர் வாழ்வில்...அவர் மனதில் ... இன்னும் என்னென்ன மாறுதல்கள் ஏற்பட்டிருக்குமோ! அவர் இதயத்தில் தான் இன்பவல்லியாக வீற்றிருந்த இடத்தில் இன்று......? இப்படியே விட்டுவிட்டு லீவு எடுத்துக்கொண்டு ஓடிவிட்டால் ..? ஏன் ஓடவேண்டும்?—யார் யாரையோ... கண்டவர்களையெல்லாம் அக்கறையுடன் கவனித்துவிட்டு, இத்தனை நாளாக இதயம் ஏங்கித் தவித்துக் கிடந்த அவருக்கு, அவர் அவதிப்படும் போது தன் கையால் பணிவிடை செய்து சொஸ்தப்படுத்த வேண்டாமா?

என்னென்னவோ எண்ணினாள். பிறகு துணிந்து மெல்ல நெருங்கி, கட்டிலைப் பிடித்துக்கொண்டு, "புரொபஸர் ராகவன்!" என்று மெல்லிய குரலில் ஆர்வத்துடன் கூப்பிட்டாள்.



அவருடைய உதடுகள் லேசாகவிரிந்தன. ஆனால் பதிலில்லை.

மீண்டும், "புரொபஸர்......" என்றாள்.

"யாரது?" என்று கேட்டுக்கொண்டே ராகவன் எழுந்திருக்க முயன்றார்.

"தயவு செய்து எழுந்திருக்க வேண்டாம். நான் இங்கே நர்ஸ். காலை 'ட்யூட்டி'க்கு வந்திருக்கிறேன். இரவு நன்றாய்த் தூங்கினீர்களா? முகத்தில் எரிச்சல் எப்படி இருக்கிறது? இன்னும் என்ன விசேஷம்?" என்று உத்தியோக தோரணையில், ஆனால் கனிந்த குரலில் கேட்டாள்.

"நன்றாகத் தூங்கினேன். எரிச்சல் அதிகமில்லை; ஆனால்......" என்று மழுமாறினார்.

"என்ன?"

"ஒன்றுமில்லை...... உங்கள் குரல்... எனக்குப் பழைய நினைவுகளையெல்லாம்... கிளறி விட்டது. அதுதான்......"

"என்ன, காதல் நினைவுகளோ?"

"ஆமா...ம்..." என்று கொஞ்சம் தயங்கினார்.

"இந்த ஆஸ்பத்திரிக் கட்டில்களிலேயே ஏதோ மகத்துவம் இருக்கிறது. எவ்வளவோ வேதனைகளுக்கு இடையிலும் காதல் கனவுகளைக் கிளறிவிட்டு ..." என்று சிரித்தாள். அவளுடைய பழைய குறும்பும், சிரிப்பும் நொடிப்பொழுதில் திரும்பி விட்டது.

"கட்டிலின் மகத்துவமல்ல! மன்னித்துக் கொள்ளுங்கள். உங்கள் இனிய குரலின் சாயையும், சிரிப்பொலியின் நெளிவுகளும்..."

"......உங்கள் காதலியுடையதைப் போல இருக்கிறதோ! அடுத்தபடியாக என்னையே உங்கள் காதலி என்று உரிமை கொண்டாடுவீர்கள் போலிருக்கிறதே! பொல்லாத புரொபஸர்தான்! பேஷ்!" என்று சிரித்தாள். எனினும் அவள் பெண்ணுள்ளம் பூரித்து விம்மியது.

"இல்லை ... ஆமாம் ... வந்து ... உங்கள் குரலைப் போலவேதான் ... பேசும் தோரணை கூட......"

அவள் தர்மாமீட்டரை அவருடைய வாயில் செருகினாள். அவர் சிந்தனையிலாழ்ந்தார். பிறகு மீண்டும் "ஒரே மாதிரியான இரண்டு குரல்கள் உலகத்தில் கிடையாது என்று சொல்லுகிறீர்களே!" என்று ஆரம்பித்தார்.

"நான் நினைத்ததுபோல ஆகிவிட்டது. எனக்கு எந்த புரொபஸருடனும் அறிமுகமில்லை. சரி, உங்கள் காதலியைப் பற்றி ஒழிந்தபோது சாவகாசமாகப் பேசலாம். இதோ டாக்டர் வந்து விட்டார்!" என்று அவள் நழுவினாள்.

★

டாக்டர் வந்து ஒவ்வொரு கேசுக்கும் சிகிச்சை முறைகளைப் பற்றி விவரித்து விட்டுப் போய்விட்டார். அவள் மற்றவர்களையெல்லாம் கவனித்து விட்டு ராகவனிடம் வந்தாள். வெகு சிரத்தையுடன் முகத்திலிருந்த கட்டுகளையெல்லாம் அவிழ்த்தாள். நெஞ்சு 'பக் - பக்' கென்று அடித்துக் கொண்டது. கை நடுங்கியது. மனதைத் திடப்படுத்திக் கொண்டு கவனித்தாள். புண் நன்றாக ஆறிக்கொண்டு வந்தது. கண்களுக்குக் கெடுதி ஏற்படவில்லை. அதில் பரம திருப்தி. எனினும் பக்கத்தில் புண்ணாக இருந்ததால் கண்களைத் திறக்க முடியாதபடி. மீண்டும் பத்திரமாகக் கட்டி விட்டு, இதர இடங்களைச் சுத்தம் செய்து மருந்து வைத்துக் கட்டினாள். இதற்கிடையே அவரிடம் ஏதேதோ பேச்சுக் கொடுத்துக் கொண்டிருந்தாள். அவரும் அவள் குரலின் இனிமையில் லயித்து, அதன் போதையில் தன் வேதனையை மறந்து இன்பமயமான கனவுகளில் மிதந்து கொண்டிருந்தார். 'பாண்டேஜ்' கட்டி முடிந்ததும் "ஸிஸ்டர்! நீங்கள் இப்படியே பேசிக் கொண்டிருந்தால்......!" என்று அவர் ஆரம்பித்தார்.

"ஊம்......?"

"எனக்கு மிகவும் ஹிதமாக..."

"......இருக்கும்! நீங்கள் இந்த வார்டிலேயே ஒரே வியாதியஸ்தராக இருந்தால் நானும் நாள் முழுவதும் உங்களிடமே பேசிக் கொண்டிருக்கலாம். ஆனால், அதிர்ஷ்டவசமாக இன்னும் இருபது பேர் இருக்கிறார்களே!" என்று சிரித்துக் கொண்டே நழுவினாள். எனினும் மற்ற வேலைகள் முடிந்ததும் வழக்கம்போலத் தன் தோழிகளுடன் அரட்டைக் கச்சேரியில் ஈடுபடாமல், ஏதாவது சாக்கு வைத்துக் கொண்டு அவரிடம் தானாகவே வருவாள். அவர் வாயைக் கிண்டுவாள். அவளுடைய நினைவாக, ஏதாவது அவர் உதிர்க்கும்



வார்த்தைகளை ஆவலுடன் விழுங்கி ஆனந்த பரவசமடைவாள்.

"சிஸ்டர்! உங்கள் குரலைக் கேட்கும் போதெல்லாம் அவளுடைய எழிலுருவமே என் மனத்திரையில் நிழலாடுகிறது. உண்மையில் நீங்கள் எப்படித்தான் இருக்கிறீர்கள்?"

"நானா? ஹ ... ஹ ... ஹ ... நீங்கள் பூரண சுகமாக ஆஸ்பத்திரியை விட்டுப் போகும்போது என்னைப் பார்க்காமலா போகப் போகிறீர்கள்? உங்கள் காதலி எங்கே, நான் எங்கே? நான் கருப்புத்தான்! குறுகிய நெற்றி, சின்ன கண்கள், சப்பை மூக்கு, தடித்த உதடுகள், கனத்த சரீரம்......!"

"போதும், போதும்! என்னைப் புரளி பண்ண வேண்டாம்! உங்கள் குரலுக்கு இப்படியெல்லாம் இருப்பது சாத்தியமே யல்ல!"

"அவள் எப்படி?"

"ஊம்! கமலினியா? சிரித்துக் கொண்டே யிருப்பாள்! அகன்ற ஆழமான கருநீல விழிகள், ரோஜா இதழ்கள், மாம்பழக் கன்னங்கள், தளதளவென்று கட்டு விடாத தேகம், மிருதுவான தளிர்க் கரங்கள்......" என்று சொல்லிக் கொண்டே, தட்டித் தடவி அவள் கையை மெதுவாகப் பிடித்து, மௌனமாகப் பெருமூச்சு விட்டார்.

"பிரமாதமாக வர்ணிக்கிறீர்களே! கனவில் கண்ட காதலியா, அல்லது கவிதையில் படித்து ......?"

"இல்லை, இல்லை! ஆறு மாதம் ஆர்வமுடன் நேரில் பழகி நேசித்தவளே தான்! ஆனால் ......"

"ஊம்......?"

"இன்று ...... அவள்......"

"எங்கே ......இல்லையா?"

"இருப்பாள் ... நிச்சயம் இருப்பாள். ஆனால், எங்கேயோ..."

"ஐயோ பாவம்! அவளை நினைத்து இப்படி உருகுகிற உங்களை ஏமாற்றித் தவிக்கவிட்டு விட்டு, அவள் வேறு யாருடனாவது......?"

"சே, சே! சிஸ்டர், அப்படிச் சொல்லவே சொல்லாதீர்கள்!" என்றார் ஆவேசத்துடன். பிறகு சாவதானமாக "அவள் ஒரு போதும் அதுபோல......"

"அப்படியானால் ...?"

"நான்தான் அவளை விட்டுவிட்டு ஓடி விட்டேன்!"

அவள் இதயம் 'டக்' கென்று நின்று விட்டது. கட்டிலை இறுகப் பிடித்துக் கொண்டு, "ஆண் பிள்ளைகளே இப்படித்தானோ? உங்களுக்கு அவளைவிட அழகியாக ஒருத்தி கிடைத்தாளாக்கும்?" என்றாள் பரிகாச தொனியில்.

"அவளைவிட அழகியா? அப்படியே எவளாவது வந்தாலும் என் இதயத்தில் அவள் இடங் கொண்டிருக்கும் ஸ்தானத்தை எந்த அழகியாலுமே ஸ்வீகரித்துக் கொள்ள முடியாது. நான் தான் ஒரு கோழை. அவளைக் கல்யாணம் செய்து கொள்வதை என் பெற்றோர் விரும்பவில்லை. வேறொரு பெண்ணை நிச்சயம் செய்தார்கள். கல்யாணத்திற்குச் சில தினங்களுக்கு முன் யாரிடமும் சொல்லாமல் — அவளுக்கும் தெரிவிக்காமல் — ஊரை விட்டே ஓடினேன். எங்கெங்கோ அலைந்து திரிந்துவிட்டு இறுதியில் கல்கத்தாவுக்குச் சென்றேன். அங்கே சர்வகலாசாலையில் ரஸாயன ஆராய்ச்சி மாணவனாக 'ஸ்காலர்ஷிப்' கிடைத்தது. நாலு வருஷத்தை அங்கேயே கழித்தேன். சில மாதங்களாகத்தான் இங்கே ராஜதானிக் கல்லூரியில் ரஸாயன ஆசிரியராக......" என்று அவர் மேலே ஏதோ சொல்லி முடிப்பதற்குள், விசிட்டர்கள் வரும் நேரமாகிவிட்டது. வியாதியஸ்தர்களைக் காண அவரவர் உறவினர்களும் நண்பர்களும் வந்து கொண்டிருந்தனர். ஓர் அழகிய யுவதி வந்து ராகவனுக்குச் சமீபத்தில் உட்கார்ந்து கொண்டு "எப்படி இருக்கிறது?" என்றாள் வெகு ஆவலோடு.

"யார்? வாஸந்தியா? வா. தேவலை! நீ மட்டுமா வந்தாய்......?"

வந்தவள் கமலினியை ஏற இறங்கப் பார்த்தாள். இவள் கண்களும் அவளை உன்னிப்பாகக் கவனித்து எடை போட்டன. முன்பின் சந்தித்திராத இந்த இரு பெண்களின் பார்வையிலும் ஏனோ துளிக்கூட சிநேகபாவமே இல்லை. ஒரு விசித்திரமான வெறுப்பின் சாயலும் பகைமையின் ஒளியுமே மின்னவிட்டது. அத்துடன் கமலினி ஏதோ காரியமாகப் போய்விட்டாள்.

★

சற்று நேரத்திற்கெல்லாம் கமலினி திரும்பிய போது வாஸந்தி ராகவனுடைய பாண்டேஜை அவிழ்த்துக் கொண்டிருப்பதைக் கண்டாள். உடனே பதட்டத்துடன் சீறிக்கொண்டு ஓடி வந்து அவளை அப்புறம் தள்ளி விட்டு பாண்டேஜைச் சரியாகக் கட்டினாள்.

"என்ன காரியம் செய்தாய்? நன்றாக ஆறி வரும்போது நன்னு பின்னுவென்று நீ கையைப் போட்டு அவிழ்த்தாள்.

ஏதாவது கெடுதி ஏற்பட்டால்......?'' என்று அனலைக் கக்கினாள்.

அவள் எழுந்தாள். மெல்ல அவளை நெருங்கித் தழுதழுத்த குரலில் ''அவர் கண்களுக்கு ஏதாவது ஆபத்து வந்து விட்டதோ என்றுதான் பார்த்தேன். என்னை மன்னியுங்கள்! கல்யாணமாகி இன்னும் ஆறு மாதம்கூட ஆகவில்லை. அதற்குள்ளாக இப்படி......'' என்று பெண்ணுள்ளத்தின் அனுதாபத்தை உளறினாள்.

ஆனால், கமலினியின் முகத்தில்—அவள் இதயத்தில் — பேயறைந்ததுபோல் இருந்தது. கோபம், ஆத்திரம், ஏமாற்றம், பொறாமை எல்லாம் வீறிட்டுச் சிலிர்த்து எழுந்து அவளைப் பிடித்து உலுக்கின. சற்று நிதானித்தாள். ''ஏன் இவ்வளவு ஆத்திரம், பொறாமை எல்லாம்? அவளும் ஒரு யுவதிதானே! பாவம். அவள் பெண்ணுள்ளம் என்ன பாடுபடும்.........?''—இப்படி யெல்லாம் பலவாறு நினைத்தாள். அவள் இதயம் சற்று இளகியது. ''பயப்படாதீர்கள்! அவர் கண்களுக்குக் கெடுதி ஏற்படவே யில்லை. ஆனால், முகம் மட்டும் கொஞ்சம் விகாரமாகத்தா னிருக்கும். அதற்கு இப்போதே உங்கள் மனசைத் தைரியப் படுத்திக் கொண்டு தயாராக இருங்கள். இங்கே எங்களாலான உதவி யெல்லாம் தாராளமாகச் செய்கிறோம்'' என்று சொல்லிவிட்டு நழுவினாள், தன் கண்களில் வழிய இருந்த கண்ணீரை அவளிடமிருந்து மறைப்பதற்காகத்தான்!

அவள் போனதும் அவர் ''வாஸந்தி, நீ விசாரப்படாதே! இங்கே என்னை நன்றாகக் கவனிக்கிறார்கள். அதிலும் அந்த நர்ஸ் இருக்கிறாளே......''

''......அவளைக் கண்டாலே எனக்குப் பிடிக்கவில்லை. அவள் உங்களைப் பார்க்கிற பார்வையும் பேசுகிற தோரணையும்!''

''அப்படி யெல்லாம் சொல்லாதே! ரொம்பதங்கமானவள். மிகவும் பரிவோடு உபசரிக்கிறாள். அவள் குரல் கூட......''

''என்னவாம்? குயில் கூவுகிறதைப் போல இருக்கிறதோ? தேன் போலத் தித்திக்கிறதோ? அம்மம்மா! இந்த ஆண் பிள்ளைகள்......!''

''இல்லை......என் பழைய நினைவின் நிழல்களை......''

''ஓஹோ! உங்கள் காதல் தெய்வம் கமலினி இசைத்த அமர கீதம்போல இருக்கிறதோ?''

''பரிகாசம் செய்யாதே! வந்து...... அவள்......''

'''அவள்' கிடக்கட்டும்! இந்த ஆரஞ்சுச் சுளையைச் சாப்பிடுங்கள்!'' என்று அவர் வாயில் ஊட்டினாள்.

கமலினிக்கு வேறு எங்கும் இருப்புக் கொள்ளவில்லை. ஏதோ சாக்கு வைத்துக் கொண்டு வந்தாள். கணவனும் மனைவியும் ஏதேதோ பேசிக் கொண்டிருந்தனர். அடுத்த கட்டிலுக்குப் போனாள். எனினும் அவளுடைய காதுகள் மட்டும் இங்கேயே இருந்தன.

மிஸஸ் ராகவன் அவர் பக்கத்திலிருந்தபடி அவருக்கு இதமாகத் தடவிக் கொடுத்துக் கொண்டிருந்தாள். புரொபஸருடைய கை அவளுடைய தோளில் கிடந்தது.

''ஆமாம், 'அவள், அவள்' என்று ஸ்மரிக்கிறீர்களே! 'அவள்' எப்படித் தான் இருப்பாள்?'' என்று குனிந்து அவர் முகத்திடம் நெருங்கி ஆவலோடு கேட்டாள் வாஸந்தி.

அவர், ''யார், கமலினியைக் கேட்கிறாயா?'' என்றார். பிறகு சற்று நிதானித்து, ''அவள் உன் கால் சுண்டு விரலுக்குக்கூட இணையாக மாட்டாளே!'' என்றார்.

நர்ஸ் கமலினி மூர்ச்சித்துத் தடா லென்று கீழே விழுந்தாள்!



## ஒரே நிமிஷத்தில்

ராஜாஜி சென்னை மாகாணப் பிரதம மந்திரியாய் இருந்தபோது ஒரு நாள் தம்முடைய ஆபீஸ் சேவகனிடம் தபால் ஸ்டாம்பு ஒன்றைக் கொடுத்து அதைக் 'கவரி'ன்மீது ஒட்டிக் கொண்டு வரும்படி கூறினார். சேவகன் தவறுதலாய் பிரிட்டிஷ் ராஜாத் தலையுடன் கூடிய ஸ்டாம்பைத் தலைகீழாய் ஒட்டிக்கொண்டு வந்து அவரிடம் கொடுத்தான். அதைக் கண்ட ராஜாஜி தமது சுபாவமான நகைச் சுவையுடன், ''என்னப்பா! நாங்களெல்லாம் பிரிட்டிஷ் ராஜாங்கத்தைக் கவிழ்க்க வேண்டுமென்று படாத பாடு படுகிறோம். நீ அந்தக் காரியத்தை ஒரு நிமிஷத்தில் செய்து விட்டாயே! பேஷ்!'' என்றார்.

—ரா. ஸ்ரீ.

# கம்பர் தரும் காட்சி

## பெண்தானே: என்னத்தைப் பேச!

டி. கே. சி.

“ராமன் தியாகமூர்த்தி. தன் கைக்கு வந்த ராஜ்யத்தை அப்படியே தம்பிக்கு ஈந்த தியாக மூர்த்தி அல்லவா!

“இத்தகைய ஐயனையா, அயோக்கியன் சுக்கிரீவனோடு சேர்ந்து எனக்கு எதிராக வந்திருக்கிறான் என்று சொல்லுகிறாய்?” என்பதாக மனைவி தாரையை வாலி கண்டிக்கிறான். அவன் மேலும்:

“ராமனுடைய பராக்கிரமம் எப்படி என்று உனக்குத் தெரியாது. உலகத்திலுள்ளவர்கள் எல்லாருமே ஒன்று சேர்ந்து எதிர்த்து வந்தாலும் அவனுக்குத் துணை என்பது ஒன்று வேண்டுமா! வேண்டாம்” என்கிறான்.

நின்றபேர் உலகெலாம்
நெருக்கி நேரினும்
வென்றிவெம் சிலையலால்
வேறு வேண்டுமோ!
தன்துணை ஒருவரும்
தன்னின் வேறிலான் —
புன்தொழிற் குரங்கொடு
புணரும் நட்பனோ!

[நின்றபேர் உலகெலாம்: சக்தி வாய்ந்து நிற்கும் நாடுகள் எல்லாம்; நெருக்கி நேரினும்: ஒன்று சேர்ந்து எதிர்த்த போதிலும்; தன் துணை ஒருவரும் தன்னின் வேறிலான்: தனக்குத் துணை — தன்னை அன்றி வேறு ஒருவரும் இல்லை: அப்பேர்ப்பட்ட ராமன்; குரங்கொடு புணரும் நட்பனோ: குரங்கோடு சினேகம் வைத்துக் கொள்ள வேண்டியவனோ.]

• • •

தேர்ப் படை, யானைப் படை, குதிரைப் படை, காலாட் படை என்ற படையெல்லாம் படையல்ல. வில் ஒன்றுதான் படை. அரசர் துணை உண்டோ என்றால் கிடையாது. தனக்குத் துணை தான்தான். அத்தகைய ராமனுக்கு உயிர் என்பது எது தெரியுமா?

தம்பியர் அல்லது
தனக்கு வேறுயிர்
இம்பரின் இல(து)என
எண்ணி ஏய்ந்தவன்:
எம்பியும் யானும்உற்(று)
எதிர்ந்த போரினில்
அம்பிடை தொடுக்குமோ,
அருளின் ஆழியான்!

[வேறு உயிர் இம்பரின் இலது என: உயிர் என்று சொல்லுவதற்கு வேறொன்றும் இகத்தில் இல்லை என்று; எண்ணி ஏய்ந்தவன்: நிலையான எண்ணத்தில் வாழ்ந்து வருபவன்; எம்பியும் யானும் உற்று எதிர்ந்த போரினில்: எனக்குத் தம்பி என்று வாய்த்திருக்கிறானே, அவனும் நானுமாக எதிர்த்துப் போர் செய்யும்போது; அம்பு இடை தொடுக்குமோ: அம்பு ஒன்றை எடுத்து என்மேல் எய்யவும் செய்வானா; அருளின் ஆழியான்: கருணை சமுத்திரமாகிய ராமன்.]

குறிப்பு:—தன்னை எவ்விதத்திலும் பகைக்க மாட்டான் ராமன் என்ற அபாரமான உறுதி வாலியின் உள்ளத்தில் இருக்கிறது. அதைத் தாரைக்கு விளக்க வேண்டியதற்காகவே ராமனுக்குத் ‘தம்பியர் அல்லது வேறு உயிர் இல்லை’ என்று சொல்லுகிறான். அந்த வாக்கியத்துக்கு வேகம் கொடுக்க, “வில்லன்றிப் படையில்லை” “தான் அன்றித் துணையில்லை” என்று தோற்றுவாய்க் கொடுத்தது அருமையான பாவத்தில் வாய்ந்திருக்கிறது.

• • •

வாலி தாரையைப் பார்த்து, “சிறிது நேரம் பொறுத்துக் கொண்டிரு; ஒரு விநாடியில் திரும்பி வந்து விடுகிறேன். மனங் கலங்க வேண்டாம்” என்று ஆறுதலாய்ச் சொன்னான்.

‘இருத்திநீ இறைஇவண்,
இமைப்பில் காலையில்
உருத்தவன் உயிர்குடித்(து)
உடன்வந் தாரையும்
கருத்தழித்(து) எய்துவன்,
கலங்கல்’ என்றனன்
விரைக்குழல் பின்னுரை
விளம்ப அஞ்சினள்.

[இருத்தி நீ இறை இவண்: இங்கேயே சிறிது நேரம் நீ இரு; இமைப்பில் காலையில்: கண் இமைக்கும் நேரத்துக்கு முன்னதாகவே; உருத்தவன் உயிர் குடித்து: கோபத்தோடு வந்துள்ள அந்தச் சுக்கிரீவனது உயிரை மாய்த்து; கருத்து அழித்து எய்துவன்: ஏதோ எண்ணிக் கொண்டிருக்கிறார்களே—அதாவது என்னைக் கொன்று விடலாம் என்று அந்த எண்ணத்தையும் மாய்த்துத் திரும்பி வருவேன்; கலங்கல் என்றனன்: கலங்க வேண்டாம் என்று ஆறுதலாய்ச் சொன்னான்; விரைக்குழல் பின்: தாரையானவள் அதற்குப் பிறகு; உரை விளம்ப அஞ்சினள்: வேறு வார்த்தை சொல்ல பயந்து சும்மா இருந்து விட்டாள்.]

தாரை பெண்தானே. அவளால் வேறு என்ன செய்ய முடியும்?

# சந்திரஹாரம்

ஆசிரியர் ..................... மொழி பெயர்ப்பு:
பிரேம் சந்த் ..................... ரா. வீழிநாதன்.



பத்மா கீழே இறங்கி வருவதைக் கண்டதும் தேவிதீன், "அம்மா, சாப்பிட்டாயா? வேறு ஏதாவது வேண்டுமா?" என்று கேட்டுக் கொண்டே மாடிப் படியை நெருங்கினான்.

அவள் அருகில் வந்ததும், "சாப்பிட்டுவிட்டேன். வேறு ஒன்றும் எனக்கு வேண்டாம். என் தாத்தா! ஒரு காரியம் செய்ய முடியுமா? நான் ஒரு கடிதம் எழுதித் தருகிறேன். அதை எப்படியாவது அவரிடம் சேர்த்துவிட்டால் தேவலை. அதற்காகக் கொஞ்சம் பணம் செலவழித்தாலும் பாதகமில்லை. முடியுமா?" என்று பத்மா கேட்டாள்.

தேவிதீன் தலையை அசைத்து, "கஷ்டமான காரியம் அது. ஏனென்றால் சாதாரண ஆட்களை அவர்கள் காவலுக்குப் போடவில்லை. நான் இரண்டு மூன்று தடவை அவரைப் பார்ப்பதற்காகப் போயிருந்தேன். 'வாசற் பக்கத்தில் நிற்கக்கூட விடமாட்டோம்' என்று என்னை அதட்டி விரட்டி விட்டார்கள்!" என்றான்.

"ஆமாம், அந்தப் பங்களாவுக்குப் பக்கத்தில் என்ன இருக்கிறது?"

"ஒரு புறத்தில் இன்னொரு பங்களா இருக்கிறது. இன்னொரு புறத்தில் ஒரு நெட்டு மாந்தோப்பு இருக்கிறது. எதிர்த்தாற்போலத்தான் சாலை."

"சாயந்திர வேளைகளில் அவர் உலாவப் புறப்படுவதில்லையா?"

"பங்களா வாசலிலேயே நாற்காலி போட்டுக்கொண்டு அவர் உட்காருகிறார். அந்தச் சமயம் இரண்டு மூன்று போலீஸ் அதிகாரிகளும் அவருடன் பேச உட்கார்ந்து விடுகிறார்கள்!"

"யாராவது அந்தத் தோப்பில் ஒளிந்து உட்கார முடியுமோ, இல்லையோ? அப்படி ஒளிந்து உட்கார்ந்து கொண்டு, அவர் தனியாக இருக்கும் சமயம் பார்த்துக் கடிதத்தை விட்டெறிய முடியாதா? விட்டெறிந்தால் அவர் தானாக எடுத்துக் கொள்ளுகிறார்!"

தேவிதீன் வியப்புடன் வாயைப் பிளந்து கொண்டு, "விட்டெறியலாம். ஆனால் அவர் தனியாக உட்கார்ந்திருப்பதில்லையே! அந்தக் கஷ்டம்தானே குறுக்கிடுகிறது!" என்றான்.

அன்று மாலை கொஞ்சம் நன்றாக இருட்டியதும், தேவிதீனை அழைத்துக் கொண்டு, ரமாநாத் தங்கியிருந்த பங்களாப் பக்கம் பத்மா புறப்பட்டாள். புறப்படுவதற்கு முன்பே அவள் தயாராக ஒரு கடிதத்தை எழுதி வைத்துக்கொண்டாள். வழிநெடுக, 'இன்னும் எவ்வளவு தூரம் இருக்கிறது? இன்னும் இவ்வளவு தூரம் இருக்குமா? பங்களா பெரியதா, சின்னதா? பங்களாவின் வராந்தாவில் விளக்கு எரியுமா, எரியாதா?' என்று கேள்விகளுக்கு மேல் கேள்விகளாகக் கேட்டு, அவள் தேவிதீனைச் சக்கையாக வாட்டி எடுத்துவிட்டாள். அவளுடைய உள்ளத்தில் சிந்தனைக்கு மேல் சிந்தனை, அலைகளுக்கு மேல் அலைகளைப் போல எழுந்தன. 'ரமாநாத் தனிமையில் அகப்பட்டு விட்டால் கைக்குட்டையில் கடிதத்தைச் சுற்றி அவருக்கு எதிரே விட்டெறிவேன்! அது அவருடைய கால்களில் போய் விழும். அவர் உடனே குனிந்து எடுத்துக் கொள்ளுவார்!' என்றெல்லாம் அவள் மனக் கோட்டை கட்டிக் கொண்டாள். 'ஆமாம், அவர் அடையாளம் கூடத் தெரியாமல் உருமாறிப் போயிருப்பாரோ?' என்று அதற்கடுத்தாற்போல, அவளுடைய உள்ளத்தில் கவலையும் எழுந்தது.

இதற்கு மத்தியில் அவளுக்கு ஒரு சந்தேகம் எழுந்தது. 'நான் எழுதியிருக்கும்



கடிதத்தைப் படித்த பிறகும் அவருடைய மனம் மாறுவிட்டால் என்ன ஆகும்? அவர் தன் சாட்சியத்தை மாற்றிக் கொள்ளாவிட்டால் என்ன செய்வது? அவருக்கு என் நினைவு இருக்கிறதோ, இல்லையோ? யார் கண்டது? மறந்தாலும் மறந்திருப்பார்!—ஆமாம், என்னைக் கண்டதும் அவர் பாராதவர்போல முகத்தைத் திருப்பிக் கொண்டு விட்டால் ...?'

இப்படி எண்ணியதும் அவளைத் தூக்கி வாரிப் போட்டது. அவள் தன்னைச் சமாளித்துக் கொண்டு, "என் தாத்தா, அவர் எப்பொழுதாவது வீட்டைப் பற்றிப் பேச்சு எடுப்பது உண்டோ?" என்று கேட்டாள்.

தேவீதின் தலையசைத்து, "இன்று வரை அவர் வீட்டைப் பற்றிப் பேச்சு எடுத்ததே இல்லை. ஆனால் எப்பொழுது பார்த்தாலும் முகத்தைத் தொங்கவிட்டுக் கொண்டு வருத்தமாகவேதான் உட்கார்ந்திருக்கிறார், அம்மா!" என்றான்.

அவன் சொன்னதைக் கேட்டதும், பத்மாவுக்குக் கொஞ்ச நஞ்சம் இருந்த நம்பிக்கையும் மறைந்து விட்டது; சந்தேகம்தான் இன்னும் அதிகரித்தது.

அப்பொழுது நகரத்து நெருக்கடியைத் தாண்டி அவர்கள் வெகுதூரம் வந்திருந்தார்கள். நாற்புறமும் ஒரே அமைதி நிலவியிருந்தது. பகல் முழுவதும் ஓயாமல் ஒழியாமல் வீசிக் கொண்டிருந்த காற்றும் அடங்கிவிட்டது. ஒருவேளை அதுவும் இளைப்பாறப் போய் விட்டதோ, என்னவோ! சாலையோரத்தில் உள்ள மரங்களும் மைதானமும் சந்திரனின் மங்கிய ஒளியில் நம்பிக்கை இழந்த நிர்ஜீவன்களாகக் காட்சியளித்தன. அந்த இயற்கைக் காட்சியிலே லயித்து நடந்து கொண்டிருந்த பத்மாவுக்கு 'தனது பிரயாசைகளெல்லாம் விழலுக்கு இறைத்த நீர் போலாகி விடுமோ! தனது பிரயாணத்தின் லட்சியம் ஈடேறுமோ!' என்ற சந்தேகம் வலுத்தது. பிடி சோற்றுக்காகப் பரிதவிக்கும் அனாதைப் பிச்சைக்காரன், 'அடுத்த வீட்டிலும் அதே வசைமொழிகள்தான் கிடைக்கும்; பிடி சோறுகூடக் கிடைக்காது' என்று தெரிந்திருந்தும் வாசலுக்கு வாசல் நின்று, 'அம்மா, தாயே! நீ நல்லா யிருப்பே! பிடி சோறு போடம்மா!' என்று வாழ்த்திக் கொண்டே பிச்சைக்குக் கை நீட்டுகிறான் அல்லவா? அதே நிலையில்தான் அந்தச் சமயம் பத்மா இருந்தாள். அவளை நம்பிக்கை கைவிட்டு விட்டது; அவநம்பிக்கைதான் ஊன்றுகோல் போல அச்சமயம் அவளுக்குக் கைகொடுத்து உதவியது.

சிறிது தூரம் சென்றதும், சாலையின் வலது புறத்தில் மின்சார வெளிச்சம் தெரிந்தது. தேவீதின் ஒரு பங்களாவைச் சுட்டிக் காட்டி, "இதுதான் அவர் தங்கியிருக்கும் பங்களா!" என்றான்.

பத்மா ஒரு தடவை பயந்த பார்வையுடன் அந்தப் பங்களாவைப் பார்த்தாள். அங்கே அமைதி நிலவியிருந்தது. ஆள் நடமாட்டத்தையே காணோம். வாசலில் பூட்டுப் போட்டுப் பூட்டியிருப்பது வேறு தெரிந்தது.

"அங்கே ஒருத்தரும் இல்லைபோலிருக்கிறதே!" என்றாள் பத்மா.

தேவீதின் வாசற் கேட்டிற்கு அருகில் சென்று உற்றுப் பார்த்தான். பிறகு, "ஒருவேளை இந்தப் பங்களாவை விட்டுப் போய் விட்டார்களோ, என்னவோ!" என்றான்.

"எங்கேயாவது வெளியே உலாவப் போயிருக்கலாம் அல்லவா?"

"உலாவப் போயிருந்தாலும் வாசலில் காவற்காரர்கள் இருப்பார்கள் அல்லவா? அவர்கள் இல்லாமலிருப்பதனால், இந்தப்

பங்களாவை விட்டுவிட்டுப் போயிருப்பார்கள் என்றுதான் எனக்குத் தோன்றுகிறது."

"அப்படியானால் நாம் திரும்பிவிடுவோமா?"

"திரும்பவேண்டியதுதான்! எதற்கும் பக்கத்தில் விசாரித்துப் பார்ப்போம்" என்றான் தேவீநின்.

பங்களாவின் வலது பக்கத்தில் உள்ள மாந்தோப்பில் 'மினுக் மினுக்' கென்று விளக்கு வெளிச்சம் தெரிந்தது. தோப்பில் யாராவது காவற்காரன் இருப்பான் என்ற எண்ணத்துடன், "யாரப்பா, தோட்டத்துக்குள்ளே?" என்று தேவீநின் உரக்கக் குரல் கொடுத்தான்.

சிறிது நேரத்துக்கெல்லாம் ஒருவன் மாமரங்களின் மறைவிலிருந்து வெளியே வந்தான். தேவீநின் அவனைப் பார்த்ததும் அடையாளம் கண்டுகொண்டு, "நீயா! இந்தத் தோப்பை இந்த வருஷம் நீயா குத்தகைக்கு எடுத்திருக்கிறாய்?" என்று கேட்டான்.

"ஆமாம், அப்பா! நான்தான் எடுத்திருக்கிறேன். ஆனால் இந்த வருஷம் நல்ல காய்ப்பு இல்லை. கையைக் கடிக்கும் போலிருக்கிறது. ஆமாம், நீங்கள் இந்தப் பக்கம் எங்கே வந்தீங்க?" என்று கேட்டான் அந்த ஆசாமி.

"சும்மாத்தான் இந்தப் பக்கம் வந்தேன். ஆமாம், பக்கத்துப் பங்களாவில் இருந்தவர்கள் என்ன ஆனார்கள்?"

தோட்டக்காரன் ஒரு முறை நாலாபுறமும் நன்றாகச் சுற்றிப் பார்த்துவிட்டு, மிகவும் மெதுவான குரலில், "இங்கேயிருந்தது யார் தெரியுமா? அந்தக் கொள்ளைக் கேஸில் சர்க்கார் தரப்பில் சாட்சி சொல்லுகிறானே, அவன்தான்! இன்றைக்குக் காலையில் தான் அவர்கள் எல்லாரும் போனார்கள். திரும்பிவரப் பத்துப் பதினைந்து நாட்கள் ஆகும் என்று கேள்விப் பட்டேன். அந்தக் கேஸ் ஹைகோர்ட்டுக்கு வேறு போகப் போகிறதாமே! இந்தப் படித்த ஜனங்களையே நம்பக் கூடாது, அப்பா! அவர்கள் கொலைக்குக்கூட அஞ்ச மாட்டார்கள்! அவன் சொன்னது அவ்வளவும் புளுகு! தெய்வத்துக்குக்கூடப் பயப்படாமல் புளுகுகிறானே! அவன் நல்லாயிருப்பானா? குழந்தை குட்டிகள்தான் நன்றாயிருக்குமா?" என்று பேச ஆரம்பித்து விட்டான்.

பத்மா கொஞ்ச தூரத்தில் மறைவில் நின்று கொண்டிருந்தாள். நல்லவேளையாகத் தேவீநின் தோட்டக்காரனுக்கு மேலும் பேசச் சந்தர்ப்பம் அளிக்கவில்லை. "ஆமாம், அவர்கள் இன்னும் பதினைந்து நாட்களுக்குள் வந்து விடுவார்கள் என்பது



உனக்கு நன்றாகத் தெரியுமா?" என்று பேச்சை மாற்றினான்.

"காவற்காரர்கள் அப்படித்தான் சொல்லிக்கொண்டிருந்தார்கள்."

"எங்கே போயிருக்கிறார்கள் என்ற விவரம் ஏதாவது தெரியுமா?"

"அந்தச் சம்பவம் நடந்த இடத்தைச் சுற்றிப் பார்த்து வருவதற்காகப் போயிருக்கிறார்கள் என்று பேசிக்கொள்ளுகிறார்கள்" என்றான் தோட்டக்காரன்.

சற்று தூரத்தில் நின்று கொண்டிருந்த பத்மாவுக்குத் தோட்டக்காரனின் சொற்கள் அரைகுறையாகக் காதில் விழுந்தன. அதைக் கேட்டதும் அவளுக்குத் தன் உள்ளமே தவிடுபொடியாவது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. ஆனால் ரமாநாத் மீது கடுகளவாவது கோபமோ, தாபமோ, வருத்தமோ அவளுக்கு ஏற்படவில்லை. 'சகதியில் மாட்டிக்கொண்டு பரிதவிக்கும் அவனைக் கைகொடுத்து எப்படியாவது வெளியேற்ற வேண்டும். அதற்காக அவன் தன்னைத் திட்டினாலும் சரி, தள்ளி வைத்தாலும் சரி, எதையும் பொருட்படுத்தக் கூடாது. அபவாதத்திலிருந்து அவனை உய்விப்பதுதான் தன் குறிக்கோளாக இருக்க வேண்டும்' என்று அவள் மனத்தில் திடசங்கற்பம் செய்து கொண்டாள்.

தேவீதீன் தோட்டக்காரனிடம் பேச்சை முடித்துக்கொண்டு திரும்பி வந்தான். இருவரும் தோட்டத்தை விட்டு வெளியேறினர். நடுவழியில் பத்மா, "அந்தத் தோட்டக்காரனிடம், அவர்கள் திரும்பி வந்ததும் நமக்குத் தெரிவிக்கும்படி சொல்லி வைப்பதுதானே?" என்றாள்.

"சொல்லி வைத்திருக்கிறேன், அம்மா!" என்றான் தேவீதீன்.

## முப்பத்தேழாம் அத்தியாயம்

## ஜன்னலுக்கு வெளியே!

ஒரு மாதம் கடந்துவிட்டது. கோபிநாத் வந்த புதிதில் கல்கத்தாவைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தான். ஆனால் நான்கைந்து நாட்கள் கல்கத்தாவைச் சுற்றிப் பார்த்து அலுத்ததும் அவனுக்கு அங்கே இருப்புக் கொள்ளவில்லை. 'ஊருக்குப் போகவேண்டும்; ஊருக்குப் போக வேண்டும்' என்று ஊரைப் பற்றியே ஸ்மரணை செய்யலானான். அவனுக்கு ஊர் நினைவு வந்தால் கண்களில் நீர் சுரந்துவிடும். இவற்றையெல்லாம் கவனித்துக் கொண்டு வந்த பத்மா, அவனை ஊருக்குத் திருப்பி அனுப்பிவிடுவதுதான் உசிதம் என்ற முடிவுக்கு வந்துவிட்டாள்.

பத்மா அநேக தடவைகள் ரமாநாத் தங்கியிருந்த பங்களாப் பக்கம் போய் வந்தாள். ரமாநாத் திரும்பி வரவில்லை என்பது அவளுக்கு நன்றாகத் தெரியும். இருந்தாலும் அவளுடைய கால்கள் அவளையறியாமலே, ரமாநாத் தங்கியிருந்த பங்களாப் பக்கம் சென்றன. தினம் ஒரு தடவை அந்தப் பங்களா வரை போய் வந்தாலே அவளுக்கு ஒரு ஆத்ம சந்துஷ்டி ஏற்பட்டு வந்தது.

பத்மாவுக்கு அறையில் உட்கார்ந்து உட்கார்ந்து அலுப்பு ஏற்பட்டுவிட்டாலோ, அல்லது படித்துப் படித்துக் கண்கள் பூத்து விட்டாலோ, இரண்டொரு நிமிஷத்துக்குப் பக்கத்து ஜன்னலண்டை போய் நிற்பாள். ஒருநாள் மாலையில் அவள் அந்த ஜன்னலண்டை நின்று கொண்டிருந்தாள். அப்பொழுது சாலையில் சில மோட்டார் கார்கள் ஒன்றன்பின் ஒன்றாக வரிசையாகப் போய்க் கொண்டிருந்தன. 'இத்தனை மோட்டார்கள் எங்கே போகின்றன?' என்று தெரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆவலில் அவள் அவைகளை உற்று நோக்கலானாள். மொத்தம் ஆறு மோட்டார்கள் இருந்தன. அவற்றில் போலீஸ் அதிகாரிகளும், கான்ஸ்டேபிள்களும் உட்கார்ந்திருந்தனர். கடைசியாக வந்து கொண்டிருந்த மோட்டார்மீது பார்வையைச் செலுத்தியதும் அவளுடைய சரீரத்தில் மின்னல்கள் ஊடுருவிப் பாய்ந்தன; உரோமங்கள் சிலிர்த்தன. அவள் தன்னையறியாமலே மோட்டாரை நிறுத்திவிட வேண்டும் என்ற தீவிர எண்ணத்துடன் வெகு வேகமாகப் படிக்கட்டுக்கள் வரை ஓடினாள். படிக்கட்டுக்களைச் சமீபித்த பொழுதுதான், அவளுக்கு, 'தான் கீழே இறங்கிப் போவதற்குள் மோட்டார்கள் மாயமாய் மறைந்துவிடும்' என்ற உணர்ச்சி ஏற்பட்டது. ஆகவே அவள் மறுபடியும் ஜன்னலண்டையில் வந்து நின்றாள். ரமாநாத்

உட்கார்ந்திருந்த கார் வீட்டுக்கு வெகு சமீபத்தில் வந்து கொண்டிருந்தது. அவனுடைய கண்கள் ஜன்னலைப் பார்த்த வண்ணமே யிருந்தன. பத்மா ஏதோ ஜாடை காட்டிச் சொல்ல விரும்பினான்; ஆனால் அந்தப் பாழும் சங்கோசம் அதற்கு இடம் கொடுக்கவில்லை. ரமாகாந் உட்கார்ந்திருந்த காரின் வேகமும் சற்றுக் குறைவது போலத் தோன்றியது. தேவீதினுடைய பேச்சுக் குரலும் கேட்டது. ஆனால் கார் நிற்காமலேயே நகர்ந்து விட்டது. ரமாகாந் மட்டும் திரும்பித் திரும்பி ஜன்னல் பக்கம் பார்த்துக் கொண்டே போனான்.

கார் மறைந்ததும், பத்மா படிக்கட்டின் அருகில் வந்து நின்று, "தாத்தா!" என்றான்.

அவன் குரல் கொடுக்கு முன்பே மாடிப் படி ஏறி வந்து கொண்டிருந்த தேவீதின், "தம்பி வந்து விட்டான். இப்பொழுது தான் கார் போகிறது!" என்று சொல்லிக் கொண்டே மேலே ஏறி வந்தான். பத்மாவுக்கோ ஆவல் உந்தித் தள்ளியது. இருந்தாலும் அதை அடக்கிக் கொண்டு, சிறிது நாணம் கலந்த குரலில், "அவர் ஏதாவது சொன்னாரா?" என்று கேட்டான்.

"கார் ஓடும்பொழுது என்ன சொல்லுவார், பாவம்! கையைத் தூக்கிக் கும்பிட்டார். நான் 'சௌக்கியமா?' என்று கேட்டேன். அவர் வெறுமனே கையால் சாடை காட்டிவிட்டுப் போய்விட்டார். ஆமாம், நீ பார்க்கவில்லையா?" என்று கேட்டான் தேவீதின்.

பத்மா தலையைக் குனிந்து கொண்டே, "பார்க்காமல் என்ன! அப்பொழுது நான் ஜன்னலண்டைதான் நின்று கொண்டிருந்தேன்" என்றான்.

"அவரும் உன்னைப் பார்த்திருப்பார்! பார்த்ததும் அவருக்கு ஒரே ஆச்சரியமாகப் போயிருக்கும்! இவன் இங்கே எப்படி வந்தான் என்று மூளையைக் குழப்பிக் கொண்டிருப்பார்!"

"அதிருக்கட்டும், தாத்தா! வழக்கு என்றைக்கு ஆரம்பமாகப் போகிறதாம், தெரியுமா?"

"நாளைக்கே ஆரம்பமாகி விடுமாம்!"

"நாளைக்கேயா? இவ்வளவு சீக்கிரமாகவா? அப்படியானால் நாம் ஏதாவது செய்வதாயிருந்தால் இன்றைக்கே செய்து விடவேண்டும்; இல்லையா? என் கடிதத்தை எப்படியாவது அவரிடம் சேர்ப்பித்து விட்டால், நம் காரியம் கைகூடிவிடும் என்று நினைக்கிறேன். ஏதாவது அதற்கான ஏற்பாட்டைச் செய்தாக வேண்டும்" என்றான் பத்மா.

'நீ நினைப்பதுபோலக் காரியம் அவ்வளவு சீக்கிரம் முடியக் கூடியதில்லையே!' என்று சொல்லும் பாவனையில் தேவீதின் ஒரு தடவை பத்மாவைப் பார்த்தான்.

பத்மா அவனுடைய பார்வையிலிருந்து அவனுடைய மனோபாவத்தை ஒருவாறு புரிந்து கொண்டான். ஆகவே, "அவர் தன் சாட்சியத்தை மாற்றிக் கொள்ளச் சம்மதிக்க மாட்டார் என்று எண்ணுகிறீர்களா?" என்று அவன் கேட்டான்.

தேவீதினுக்கு அதை ஆமோதிப்பதைத் தவிர வேறு வழி தோன்றவில்லை. இவ்வளவு நாட்கள் அவனுடைய மனதை நோகக் கூடாது என்பதற்காக எவ்வித அபிப்பிராயமும் கொடுக்காமல் அவன் மௌனம் சாதித்து வந்தான். இன்று அவன் அந்த மௌனத்தைக் கலைத்து, "ஆமாம், அம்மா! என் உண்மையான அபிப்பிராயத்தைக் கேட்டால் 'அவர் தன் சாட்சியத்தை மாற்றிக்கொள்ள மாட்டார். அப்படி மாற்றிக் கொள்ளுவதும் ஆபத்து' என்று தான் சொல்லுவேன். ஏனென்றால் அவர் தன் சாட்சியத்தை மாற்றிச் சொன்னாலும் போலீஸிட மிருந்து தப்ப' முடியாது. இந்தக் குற்றம் இல்லாவிட்டால், இன்னொரு குற்றத்தைச் சுமத்திப் போலீஸார் அவரைப் பிடித்து விடுவார்கள். வழக்கு நடத்தி அவரைச் சக்கையாக வாட்டியும் விடுவார்கள்!" என்றான்.

'நான் அதற்காக அஞ்சவில்லை' என்று கூறுவது போலப் பத்மா ஒரு முறை தேவீதினைப் பார்த்தான். பிறகு, "தாத்தா! நான் அவரைப் போலீஸாரின் கையிலிருந்து விடுவித்துவிட முடியும் என்று சொல்லவில்லை; அந்தப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளவும் நான் தயாராயில்லை. ஆனால் 'அவருக்குக் கிட்டவிருக்கும் அந்த அபவாதத்திலிருந்து தப்புவிக்க முடிந்தால் தேவலையே!' என்றுதான் யோசிக்கிறேன். யானை தன் தலையில் தானே மண்ணை வாரிப் போட்டுக் கொள்ளுவதுபோல, அவர் தன் கைகளால் தன் வீட்டை அழிக்க முற்படுவதைக் காண எனக்குச் சகிக்கவில்லை. அதனால்தான் சொல்லுகிறேன். உண்மையில் அவர் அந்தக் கொள்ளை வழக்கில் சம்பந்தப்பட்டிருந்தால்கூட அவர் தன்

தோழர்களின் கட்சியிலேயே இருக்க வேண்டும்; அவர்கள் அனுபவிக்கும் கஷ்டநிஷ்டூரங்களைத் தானும் அனுபவிக்க வேண்டும்; மித்திர பேதம், நம்பிக்கைத் துரோகம் முதலியவைகள் செய்யக் கூடாது' என்றுதான் நான் விரும்புவேன். போதாக் குறைக்கு, இந்த வழக்கிலோ கொஞ்சம்கூட உண்மைக் கலப்பு இல்லை; முழுவதும் பொய் வழக்கு! அவர் தன் சுயநலத்தைப் பூர்த்தி செய்து கொள்ளுவதற்காகப் பொய்ச் சாட்சி சொல்லுவதைச் சகித்துக் கொண்டிருக்க என் மனம் இடம் கொடுக்கவில்லை. அவர் தன் சாட்சியத்தை என் கடிதம் கிடைத்த பிறகும் மாற்றிக் கொள்ளா விட்டால், நானே கூண்டில் ஏறிச் சகல விஷயங்களையும் அம்பலத்துக்குக் கொண்டு வருவது என்று முடிவு கட்டிவிட்டேன். முடிவு என்ன ஆனாலும் சரி, நான் லட்சியம் செய்யப் போவதில்லை. அவர் என் முகத்தில் விழிப்பதில்லை என்று முடிவு கட்டினாலும் சரி, என்னைத் தள்ளியே வைத்தாலும் சரி, நான் எதற்கும் அஞ்சப் போவதில்லை. அவர் தன் தலையில் இவ்வளவு பெரிய பாவச் சுமையை ஏற்றுக் கொள்ளுவதைப் பேசாமல் பார்த்துக் கொண்டிருக்க என் மனம் சிறிதும் இடம் கொடாது. நான் எழுதி வைத்திருக்கும் கடிதத்தில் எல்லா விஷயங்களையும் நான் விவரமாக எழுதியிருக்கிறேன். அவரிடம் எப்படியாவது கடிதத்தைச் சேர்ப்பித்து விடவேண்டும்'' என்று அவள் மன உறுதியுடன் சொன்னாள்.

தேவீதின் அவளுடைய சொற்களைக் கேட்டதும் மிகவும் பெருமித முற்றான். அவளை மிகவும் மரியாதைக்கு உகந்த பார்வையுடன் பார்த்துக் கொண்டே, ''அம்மா! இவ்வளவு திடசித்தமுள்ள உன்னால் ஆகாத காரியம் உலகத்தில் ஒன்றும் இருக்க முடியாது. உன் உள்ளம் இவ்வளவு உரம் பாய்ந்ததாக ஆகிவிட்டதைப் பார்க்க எனக்குப் பரம சந்தோஷம்! உன்னிஷ்டப்படியே நான் கடிதத்தை அவரிடம் சேர்ப்பிக்க என்னாலானவரை முயற்சித்துப் பார்க்கிறேன். கடிதத்தைக் கொண்டுவா, அம்மா!'' என்றான்.

''இல்லை, நானும் கூடவே வருகிறேன். ஒன்பது மணிக்குப் புறப்படுவோம்.''

''சரி அம்மா! நீ எப்பொழுது கூப்பிட்டாலும் நான் வரத் தயார்!'' என்றான் தேவீதின்.

(தொடரும்)

# காலக்ஷேபம்

## மனித சுபாவம்

நீதிபதி:—வாதி உம்முடைய அபிப்பிராயத்துக்கு விரோதமான அபிப்பிராயம் தெரிவித்ததற்காக நீர் அடிக்கலாமா?

குற்றவாளி:—அவனைப்போல் முட்டாள்தனமாகப் பதில் சொன்னால் கோபம் வராதா?

நீதிபதி:—நீர் மனித சுபாவத்தை அறிய வேண்டும். முட்டாள்களும் உம்மையும் என்னையும்போல மனிதர்கள்தானே?



## நல்ல நாகரிகம்

நாகரிக மனைவி:—என்னை விவாகம் செய்து கொண்ட புதிதில் நான் வீட்டுக்கு வந்ததும் நீங்கள் கிளப்புக்குப் போவதை நிறுத்தி விடுவதாகச் சொன்னீர்களே!

கணவன்:—ஆமாம். நீ வேண்டாம் என்றால் நான் போகவில்லை.

மனைவி:—நாளைய தினத்திலிருந்து நீங்கள் கிளப்புக்குப் போக வேண்டாம். ஏனென்றால் நான் வெளியே போகும்போது வீட்டைப் பார்த்துக் கொள்வது யார்?



## நல்லது!

ராமன்:—ஏது புது கடிகாரம் போலிருக்கிறதே!

கிருஷ்ணன்:—ஆமாம்.

ராமன்:—என்ன விலைக்கு வாங்கினாய்?

கிருஷ்ணன்:—விலை தெரியவில்லை. நான் அதை எடுத்து வந்த சமயத்தில் கடையில் யாரும் இல்லை!



## அப்படியா?

சிறுவன்:—ஏன் அம்மா, தினம் ஒரு ஆப்பிள் பழம் தின்றால் பிறகு டாக்டரிடம் வைத்தியமே செய்து கொள்ள வேண்டாம் என்கிறார்களே, அது உண்மைதானா?

அம்மா:—ஆமாம். அதற்கு இப்போது என்ன வந்தது?

சிறுவன்:—அது உண்மையாயிருந்தால் இன்னும் பத்து நாளைக்கு நான் வைத்தியரிடமே போக வேண்டியதில்லை.



## பழைய விவகாரம்!

எஜமான் (கோபத்துடன் வேலைக்காரனைப் பார்த்து):—இந்த மேஜையைப் பார்த்தாயா? இதன்மேல் ஆறு மாதத்துக் குப்பை படிந்து கிடக்கிறதே! இதை நீ சுத்தம் செய்யாமல் என்ன வேலை செய்கிறாய்?

வேலைக்காரன்:—ஐயா, நான் வேலைக்கு வந்து ஒரு மாதம்தானே ஆகிறது? ஆறு மாதத்துப் பழைய குப்பையைச் சுத்தம் செய்யவில்லையென்று கோபித்துக் கொண்டால் அதற்கு நான் என்ன செய்யட்டும்?

# இதோ நொடியில் நிவாரணம்!

## ஜாக்கிரதையாகவும் நிச்சயமாகவும் குணமாக்கும்

ஜலதோஷத்தை அகற்றவும், ஃப்ளூவை ஒழிக்கவும், வலி அல்லது ஜுரமுள்ள நிலைமைகளில் நிவாரணம் பெறவும் நீங்கள் செய்ய வேண்டியது இது தான். இரண்டு 'ஆஸ்ப்ரோ' வில்லைகளை சிறிது ஜலத்துடன் அல்லது சூடான பானத்துடன் உட்கொள்ளவும். உங்களை குணமாக்க 'ஆஸ்ப்ரோ' சடுதியில் வேலை செய்கின்றது. உடனேயே சமனமும் சுகமும் தெரிகின்றது. நிவாரணம் சீக்கிரமானது — அற்புதமானது. முதுகு வலி, நரம்பு வலி, உடம்பிலும் மூட்டுகளிலும் வலி நீங்குகின்றது. உஷ்ணமும், ஜலதோஷமும், ஜுரத்தின் சின்னங்களை ஒடுக்கவும், அடிதுடிப்பும் அகன்று, சாந்தமும் சௌகரியமுமான உணர்ச்சி நிலவுகின்றது. இம்மாதிரி தனித்தனி வழிகளில் 'ஆஸ்ப்ரோ' உங்களுக்கும் உங்கள் குடும்பத்துக்கும் உதவி புரிகின்றது.

இரண்டு 'ஆஸ்ப்ரோ' வில்லைகளை சிறிது ஜலத்துடன சாப்பிடவும்.

ASPRO

MADE IN ENGLAND

ASPRO REG. TRADE MARK

## ஆகையால் ஏன் வலியுடனும் ஜுரத்துடனும் கஷ்டப்படுகிறீர்?

உங்களை குணமாக்க

## 'ஆஸ்ப்ரோ'

இருக்கும்போது ஏன் அவஸ்தைப்படுகிறீர்?

### 'ஆஸ்ப்ரோ' செய்வது என்ன

விலை:

3 வில்லைகள் அணா 1. 6 வில்லைகள் அணா 2

30 வில்லைகள் அணா 10

எங்கும் கிடைக்கும்

68TH

No. 6


Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press.
116-119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk Madras.

# கல்கி





KALKI ஜனவரி 11, 1948 4 அணா

---

# குடும்பம் முழுதும் அஜீரண அவஸ்தைதான்!

**எதைத் தின்றாலும் கஷ்டமாகவே இருந்தது**

**பிறகு எல்லோரும் சுகமடைந்தனர்**

நான்கு குழந்தைகளைப் பெற்றெடுத்த ஒரு அம்மையார் எழுதுகிறார்:—

"நான்கு பேர்களடங்கிய எனது குடும்பம் முழுவதும் நானும் எப்போதும் துர்நீர்ச்சேர்க்கை, முதுகுவலி, அஜீரணம் ஆகியவற்றால் அவதியுறுவதாக அறிந்தேன். எதைத் தின்றாலும் நான் கஷ்டப்பட்டேன். க்ருஷென் சாப்பிட்டதிலிருந்து (கடந்த மூன்று மாதங்களாக) நாங்கள் எதையும் சாப்பிட்டு வருகிறோம். ஆகாரத்தை ருசித்துப் புசிக்கிறோம். உடம்பில் துர்நீர்ச் சேர்க்கையோ, வலியோ இருக்கும் அறிகுறியைக்கூடக் காணோம். இது மிகவும் விசித்திரமான விஷயம்தான்!— இதை சாப்பிட்டு வந்தால் எவ்வித பிரதிக் கிரியையும் இல்லை. எதை வேண்டுமானாலும் விட்டு விடலாம். ஆனால் க்ருஷென் சாப்பிடும் பழக்கத்தை மட்டும் எங்களால் கைவிட முடியாது."

—(மிஸஸ்) ஸ். டே.

ஜடாரஸமும் ஜீரணரஸமும் தேகத்தில் பிரவாகிக்க விட்டால்— நீங்கள் உண்ணும் ஆகாரம் தேகத்தில் ஐக்கியமாவதற்கு மாறாக ஒன்றாகச் சேர்ந்து— வயிற்றிலேயே தங்கி அபாயகரமான விஷ அமிலங்களை ஊறச் செய்கிறது. உங்களுக்கு வேண்டியதெல்லாம் என்ன —ஒரு டானிக் ஒரு இயற்கையான டானிக் — இயற்கையான உப்புத் தாதுக்களடங்கியது!

இத்தகைய உப்புத் தாதுக்களெல்லாம் க்ருஷெனில் அடங்கியுள்ளன. இவற்றில் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு விதகுணம். இந்த தாதுக்களின் முதல் குணம்— உமிழ் நீரைப் பெருக்கும்—பசியை உண்டாக்கும். அடுத்தபடியாக வயிற்றில் ஜீரணரஸத்தை ஊற்றுப் பெருக்கெடுக்கச் செய்து ஆகாரத்தை ஜீரணம் செய்யும். பிறகு ஜீரண பாதைகளில் சரியாக ஜீரணிக்கப்படாத பொருள்களை ஜீரணிக்கச் செய்து உடலில் ஐக்கியமாக்குகிறது.

எல்லா கெமிஸ்டுகளிடமும் வியாபாரிகளிடமும் க்ருஷென் சால்ட்ஸ் பாட்டில் ஒன்றுக்கு ரூ. 1-10-0 விதம் கிடைக்கும்.

# காந்திஜி பக்த சபா

## சென்னை

(28-வது ஆண்டு பொங்கல் விழா)

**செயின்ட் மேரிஸ் ஹாலில்**

**14-1-48 முதல் 23-1-48 வரை**

**10-நாட்கள்**

14—1—48 மாலை 5—6

பி. ஏ. பெரியநாயகி —பாட்டு

மாலை 6—9

யோகம், மங்களம் —நடனம்

15—1—48 மாலை 6—9

திருவாங்கூர் ஆஸ்தான வித்வான் ஜி. என். பாலசுப்ரமணியம், சேதுராமய்யர், மணி —பாட்டு

16—1—48 மாலை 6—9

பேபி கமலா —நடனம்

17—1—48 மாலை 6—9

மதுர கீதவாணி என். ஸி. வசந்த கோகிலம் & பார்ட்டி —பாட்டு

18—1—48 மாலை 6—9

தாரா சௌதரி கோஷ்டி —நடனம்

19—1—48 மாலை 6—9

வைக்கம் ஸரஸ்வதி, ஈரோடு விஸ்வநாத அய்யர், ஹம்ஸதமயந்தி —பாட்டு

20—1—48 மாலை 6—9

லலிதா, பத்மினி, ராகினி —நடனம்

21—1—48 மாலை 6—9

கானகலாதர மதுரை மணி: சௌடய்யா, மணி, வில்வாத்ரி —பாட்டு

22—1—48 மாலை 6—9

கோபிநாத், தங்கமணி கோஷ்டி —நடனம்

23—1—48 மாலை 6—9

தேசராஜ் நாடக சபையார் (காலக் கூறல்) —நாடகம்

புரோக்ராம் சமயோசித மாறுதலுக்குட்பட்டது

**சீஸன் ரூ. 50, 35, 25, 15**

**தினசரி ரூ. 10, 6, 4, 2, 1**

சீஸன் டிக்கட்டுகள் கிடைக்குமிடங்கள்:

காந்திஜி பக்த சபா,
72, ஆச்சாரப்பன் தெரு, ஜி. டி.

V. சங்கரன் செட்டியார், 10, கோவிந்தப்ப நாயக்கன் தெரு, ஜி. டி.

K. சுப்ரமண்யம், B.A., B.L.,
122, சாந்தோம் ஹைரோட் மைலாப்பூர்

ராக்ஸி பிரஸ்,
27, டானா தெரு, புரசைவாக்கம்

ஸாயல் பிரஸ், துளசிங்க பெருமாள் கோவில் தெரு, திருவல்லிக்கேணி

டாக்டர் K. சுப்ரமண்யம், B.A., B.L., தலைவர்

T. S. M. நாயுடு, காரியதரிசி

REGD. No. M. 4392












ராஜா
ஸ்னோ,
ஹேர் ஆயில்,
கஸ்தூரி ஸோப்.




FAS-10

MANYAM & CO., BANGALORE — MADRAS — BOMBAY.

பம்பாய் ஆபீஸ்: 142, ஓல்டு மோடி ஸ்ட்ரீட், போர்ட். இலங்கைக்கு சோல்டிஸ்ட்ரிப்யூட்டர்கள்:
மெஸர்ஸ். துரை. அருள் & கோ., லிட்., 93, கெய்ஸர் தெரு, கொழும்பு